Regd. No. M. 3398

4-ம் பக்கம்

*

குறைப்பட்டவள்

கஜமுகன் எழுதியது

*




13-ம் பக்கம்

*

சுவேதகேது

பாரதக்கதை

எம். வி. வி.

*

The 'SHIVAJI'-Published Every Sunday

ஆசிரியர் :
டி. சிவஞானம்

ஞாயிறு வெளியீடு

மாலை 10 | திருச்சி 25—2—1945 தாரண-ஹூ மாசி-மீ 14-உ ஞாயிற்றுக்கிழமை | மணி 14








டி. கே. எஸ். சகோதரர்களின்

"குமாஸ்தாவின் பெண்" நாடகத்தில்

பிரதான பாத்திரமாக நடிக்கும்

திரு. டி. கே. ஷண்முகம்



# அகமும் புறமும்



## செல்வர்களின் நன்கொடை

அமெரிக்காவில் சுற்றுப்பிரயாணஞ் செய்துவரும் நம்முடைய விஞ்ஞானிகளில் ஒருவர், அந் நாட்டில் பெரிய ஆராய்ச்சி ஸ்தாபனங்களும் மக்களின் பொது நலன்களுக்குரிய கழகங்களும் தனி நபர்களின் நன்கொடைகளாலேயே நடந்துவருவதைக் கண்டு பெரிதும் வியப்படைந்தார். மேலை நாடுகளில் பல ஸ்தாபனங்கள் இங்ஙனமாகச் செல்வர்கள் அளிக்கும் நன்கொடைகளாலேயே நடக்கின்றன. நமது நாடு வறுமைப்பட்ட நாடு. நாம் எதற்கும் அரசாங்கத்தின் தயவையே நாடுகிறோம். அரசாங்கமோ முதலில் ஏகாதிபத்திய நலன்களைப் பாதிக்கக் கூடிய விஷயங்களிலேயே கவனஞ் செலுத்திவிட்டுப் பின்னர் சொற்ப தொகையை மக்களின் கல்வி, விஞ்ஞான அபிவிருத்தி ஆகிய பொது நல விஷயங்களில் செலவு செய்கிறது. நம் நாட்டிலும் ஒரு சில செல்வர்கள் இருக்கத்தான் செய்கின்றனர். அவர்கள் ஏதோ சில தான தருமங்கள் செய்கின்றனராயினும், மக்கள் அனைவருக்கும் என்றென்றும் பயன் படும்படியான விஷயங்களுக்காக நன் கொடையளிப்பதில்லை. இப்போதுதான் கொஞ்சகாலமாக செல்வர்களின் கவனம் இவ் விஷயங்களிலும் திரும்பியிருக்கின்றது. தென்னாட்டைப் பொறுத்தமட்டில் ராஜா சர். அண்ணாமலை செட்டியார் ஒரு பல்கலைக் கழகத்தை நிறுவ அளித்த நன் கொடையையும், டாக்டர் அழகப்பசெட்டியார் சென்னை, அண்ணாமலை நகரம், திருவாங்கூர் ஆகிய விடங்களில் நிறுவப்பட்டுள்ள பல்கலைக் கழகங்களில் நவீன தொழிற் கல்வி ஸ்தாபனங்கள் முதலியன நிறுவுவதற்கும் இன்னும் மற்ற பரோபகார விஷயங்களுக்காகவும், அண்மையில் குஷ்டரோக ஆஸ்பத்திரிக்காகவும் பல லட்சங்கள் அளித்த நன்கொடைகளையும் நாம் அறிவோம். சமீபத்தில் சென்னையில் பிரபல லாயராக விளங்கும் வி. எல். எதிராஜ் அவர்கள் தம் சொந்த சம்பாத்தியத்திலிருந்து பத்து லட்சம் "பெண் கலாசாலை" நிறுவுவதன் பொருட்டு அளித்திருப்பதையும் நாம் அறிவோம். சில தினங்களுக்கு முன்பு சென்னை நகரசபை அவரைக் கௌரவித்த போது, அவர், தாம் சென்னை நகரம் அளித்த நாகரீக சௌகரியங்கள் யாவற்றையும் அனுபவித்தும், அங்கேயே தம் செல்வம் யாவற்றையும் ஈட்டியும், மகிழ்வுடன் வாழ்ந்தும் வந்திருக்கிறாரென்றும், அந் நலன்கள் யாவுமளித்த அந் நகருக்குப் பிரதியுபகாரமாகவே அந் நகரின் அபிவிருத்தியை உத்தேசித்து அந் நன்கொடையை அளித்தாரென்றும் கூறினர். சென்னை நகரில் எத்தனையோ லாயர்கள் எத்தனையோ லட்சங்கள் சம்பாதித்திருக்கின்றனர். இதுகாறும் அவர்களில் எவரேனும் இங்ஙனமாக நகர அபிவிருத்தியின் பொருட்டுத் தம் சம்பாத்தியத்தின் ஒரு பகுதியை நன்கொடையாக அளித்ததாகத் தெரியவில்லை. திரு. வி. எல். எதிராஜ் அவர்களே முதன் முதலாக அப் பெருமை பொருந்திய காரியததைச் செய்திருக்கிறார். அவர் நீடூழி வாழ்க! சென்னையில் பொருளீட்டும் மற்ற செல்வர்களும் ஸ்ரீ. எதிராஜ் அவர்களைப் பின் தொடர்ந்து நகர வாழ்க்கையை மேம்படுத்துவார்களாக.

## விவசாயப் பயிற்சி

"உணவுப் பொருள்களைப் பெருக்குக" என்னும் இயக்கத்துடன் தொடர்புடைய காரியங்களுக்காகச் சில புதிய சிப்பந்திகளை நியமித்து அவர்களுக்குத் தம் வேலையில் பயிற்சியளிக்கச் சென்னை அரசாங்கத்தார் திட்டமொன்று வகுத்துள்ளனர். மாகாண விவசாய இலாகாவைச் சார்ந்த விதைப் பண்ணைகளில் உயர்ந்த ரக விதைகளை உற்பத்தி செய்வது, அவற்றை விநியோகிப்பது, மாகாணமெங்கும் குடியானவர்களுக்கு ஒரு, விவசாயக் கருவிகளை இவற்றை வழங்குதல், ஆகியவை சம்பந்தமான வேலை எவ்வளவோ பெருகிவிட்டபடியால், இப்போதுள்ள சிப்பந்திகள் இவற்றையெல்லாம் சரிவரச் சமாளிக்க முடியவில்லை ஆதலால்தான் புதுச் சிப்பந்திகளை நியமிக்க வேண்டிய அவசியமேற்பட்டுள்ளது. இதற்காக விவசாயம் செய்யும் மக்களிடையே சில இளைஞர்கள் பொறுக்கியெடுக்கப்படுவர். அவர்களுக்கு இம் மாகாணத்திலுள்ள ஆறு சர்க்கார் விவசாயப் பண்ணைகளில் நவீன விவசாய முறைகள், பயிர்களைத் தாக்கும் பூச்சிப் புழுக்கள், நோய்கள் முதலியவற்றைப் போக்குவதற்குரிய முறைகள், தக்க பருவத்தில் தக்க முறைகளைக் கையாண்டு பல விதமான நல்ல ரக விதைகளை உற்பத்தி செய்யும் முறைகள், எருவு சம்பந்தமாகக் கையாள வேண்டிய முறைகள் ஆகியவை விஷயமாக அவர்களுக்கு நான்கு மாத காலம் பயிற்சியளிக்கப்படும். பயிற்சியின் போது வயலாள்கள் மாதம் இருபது ரூபாயும், மேஸ்திரிகள் பதினைந்து ரூபாயும் உதவிப் பணம் பெறுவர். இத் திட்டத்தை நிறைவேற்ற மூன்று லட்ச ரூபாய் செலவாகும். அதில் பாதி மத்திய அரசாங்கம் ஏற்கும். மாகாண விவசாய இலாகா இங்ஙனமாக மொத்தம் 520 வயலாள்களையும் 2740 மேஸ்திரிகளையும் தன் ஊழியத்தில் அமர்த்தும். இவ் வேலையைச் செய்ய நான்கு மாதப் பயிற்சி போதுமா வென்றும் ஐயம் கிளம்பியிருக்கிறது, இப்போது தற்காலிகமாக நடக்கும் "உணவுப் பொருள்களைப் பெருக்குக" என்னும் இயக்கத்தை நடத்த இப் பயிற்சி போதுமானதாக இருக்கலாம். யுத்தம் முடிந்தபின் ஏற்படப்போகும் பொருளாதார அபிவிருத்தியில் இவர்கள் எங்ஙனம் பயன்படுவார்களோ இப்போது சொல்லுவதற்கில்லை. இந்த இயக்கத்தினால் சில நன்மைகள் ஏற்படலா மென்பதை மறுப்பதற்கில்லை. பின்னரும் இந்தசிப்பந்திகள் விவசாய இலாகாவுக்குத் தேவையாயிருக்கலாம்.

## கால் நடைகளின் அபிவிருத்தி

இந்திய விவசாயக் கழகத்தைச் சார்ந்த கால் நடைகள் பகுதியின் ஆறாவது கூட்டம் இம்மாத ஆரம்பத்தில் தக்ஷிண ஐதராபாத்தில் கூடியது. கால்நடைகள் அபிவிருத்தி சம்பந்தமான ஸ்தாபனங்கள் பிரதேச வாரியாக அமைக்கப்பட வேண்டுமென அது சிபார்சு செய்திருக்கிறது. அதன்படி சிந்து பள்ளத்தாக்கைச் சார்ந்த வடமேற்கு ஒரு பிரதேசமாகவும் மத்திய இந்தியா ஒரு பிரதேசமாகவும், 50 அங்குலத்திற்கு மேல் மழை பெய்வதாயும் பிரதானமாக அரிசி விளையும் பிரதேசமாகவும் உள்ள கீழ் கங்கை, வட்டில், கிழக்குக் கடலோரம் சார்ந்த ஆற்று வண்டல் பிரதேசங்கள் ஒரு பிரதேசமாகவும். மூன்று விதமாகப் பிரிக்கப்படும், இங்ஙனம் பிரதேச வாரியாகப் பிரிப்பதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. பிரதேசத்திற்குப் பிரதேசம் இந்தியக் கால்நடைகள் மாறுபடுகின்றன. நல்ல சாதி கறவை மாடுகளைப் பெரும்பாலும் சிந்துவிலும் பஞ்சாப்பிலுமே காண்கின்றோம். மத்திய இந்தியாவிலும், பஞ்சாப்பில் உள்ளதைப் போல இல்லாவிடினும், சுமாரான நல்ல கறவை மாடுகள் உண்டு. ஆனால் அஸ்ஸாம், வங்காளம், ஒரிஸ்ஸா, சென்னை மாகாணங்களில் உள்ள கறவை மாடுகளோ மிகவும் மோசமான ரகங்கள். காளைகள் குட்டையாயும் பலவீனமாயும் உள்ளன. பசு மாடுகள் நல்ல பால் தருவதில்லை. ஆயினும் சென்னை மாகாணத்தில் நெல்லூர் ஜில்லாவில் ஒங்கோல் ஜாதிப் பசுக்களும் கோயமுத்தூர் ஜில்லாவில் காங்கயம் ஜாதிப் பசுக்களும் பேர்போனவை. காளைகளும் அவ்வண்ணமே. ஆனால் பெரும்பாலும் இப் பிரதேசங்களைச் சேர்ந்த கால் நடைகள் மோசமான நிலையில் உள்ளன. நல்ல ஜாதி பொலிகாளைகளைத் தருவித்து இப் பிரதேசங்களில் இன விருத்திக்காகப் பயன் படுவதில் பயனில்லை. இப்பிரதேசங்களில் உள்ள உயர்ந்த ரகங்களைக் கொண்டே இவ் வேலையைச் செய்து கொள்ள வேண்டும். இங்ஙனமாக கால் நடைகளின் வளர்ப்பு முறையைச் சாஸ்திர ரீதியில் நடத்தினால்தான் குறித்த காலத்திற்குள் நல்ல பலன் கிடைக்கும். அன்றியும் பிரதேச வாரியாகப் பிரிப்பதால், கால் நடைகளின் ஜீவன சம்பந்தமான பிரச்னைகளையும் நன்கு கவனிக்கலாம். ஒவ்வொரு பிரதேசத்திலும் இவை மாறுபடலாம். ஆதலால், ஒவ்வொரு பிரதேசத்தின் தேவைகளையும் உள்ள வசதிகளையும் கொண்டே

(15-ம் பக்கம் பார்க்க.)

# புது உலகம்

மும்மூர்த்திகள் ருஷியாவைச்சேர்ந்த கிரைமியாவில் யால்ட்டா என்னு மிடத்தில் கூடிப் பேசிவிட்டுக் கலைந்தனர். அவர்கள் முடிவுசெய்துள்ள விஷயங்கள் வருமாறு: நாஜி ஜர்மனி நிபந்தனை யின்றிச் சரணாகதியடையச் செய்வதற்கு என்னென்ன செய்யவேண்டுமென் பதைப்பற்றி மூவரும் ஒரு முடிவுக்கு வந்துள்ளனர். ஜர்மனியை மூன்று பிர தேசங்களாகப் பிரித்து ஒவ்வொரு வல் லரசும் ஒரு குறித்த பிரதேசத்தைக் கைப்பற்றும். பர்லின் நகரைத் தலைமை ஸ்தானமாகக் கொண்ட ஒரு மத்திய கட்டுப்பாட்டுக் கமிஷன் இம் மூன்று வல்லரசுகளின் அலுவல்களிலும் ஒரு பரஸ்பர இணைப்பை அமைக்கும். பிரான்சு விரும்பினால் அதற்கும் ஒரு பிரதேசம் தரப்படும். ஜர்மன் படைகள் யாவும் கலைக்கப்படும். நாஜிக்கட்சி ஸ்தாபனங்கள் யாவும் நிர்மூலமாக்கப் படும். இப்போது போலந்தில் ஆதிக்கம் செலுத்தும் லுப்ளின் போலிஷ் அரசாங் கத்தை மூவரும் அங்கீகரிக்கின்றனர். கிழக்கு போலிஷ் எல்லை கர்சான் எல்லை யைத் தழுவியிருக்கும். போலந்து இழக் கும் பிரதேசத்துக்கு நஷ்ட ஈடாக அதற்கு ஜர்மனியிடமிருந்து கிடைக்கும் பகுதியொன்று அளிக்கப்படும். யூகோ ஸ்லாவியாவில் கொரில்லாத் தலைவர் டிட்டோவுக்கும் பிரதமமந்திரி சுபாசிக் குக்கும் ஏற்பட்ட ஒப்பந்தம் உடனே அமுலுக்கு வரும். ஐக்கியநாடுகளின் மகாநாடு ஏப்ரல் மாதத்தில் சான் பிரான் ஸிஸ்கோவில் கூடும். அப்போது சமா தான சாசனம் தயாரிக்கப்படும். உலகப் பாதுகாப்பு ஸ்தாபனமொன்றும் அமைக் கப்படும்.

இவற்றிலிருந்து நாம் அறிவதென்ன? உலக விவகாரங்களில் சோவியத் ருஷியா பெருஞ்செல்வாக்கு பெற்றுவிட்டது. போலந்து விஷயமாக சோவியத் ருஷியா வுக்கு விட்டுக் கொடுத்திருப்பதிலிருந்து, அமெரிக்காவும் பிரிட்டனும் இதை அங்கீ கரிக்கின்றன என்பது நன்குபுலனாகிறது. ஜர்மனியின் எதிர்காலம் பற்றிய எல்லா விஷயங்களிலும் சோவியத் ருஷியாவின் சொல்லே செல்லும். பிரான்ஸ் தான் இழந்த ஏகாதிபத்தியத்தை மீண்டும்பெற சோவியத் ருஷியா துணை செய்யுமாத லால், அது எல்லா விஷயங்களிலும் சோவியத் ருஷியாவையே ஆதரிக்கும். பிரான்ஸ், பெல்ஜியம், இத்தாலி, கிரீஸ் முதலிய நாடுகளில் புதிதாகத் தேர்தல் கள் நடக்கும்போது பொதுவுடைமைக் கட்சியினரே வெற்றியடைவரென எதிர் பார்க்கப்படுகிறது. ஜர்மனியிலும் பொதுவுடைமைக் கட்சியினரே ஆக்கம் பெறலாம். ஐரோப்பாவின் பெரும் பகுதியில் இங்ஙனமாகப் பொதுவுடை மைக்கட்சியினரே ஆக்கம்பெற்றால் சோவி யத்ருஷியாவின் செல்வாக்கே ஐரோப்பா வெங்கும் ஓங்குமன்றோ? சோவியத் ருஷியா சமயம்பார்த்து ஜப்பானுடன் போருக்குச் செல்லுமென எதிர்பார்க்கப் படுகிறது. அங்ஙனம் செய்யுமானால் பசிபிக்குப் பிரதேசத்திலும் சோவியத் தின் செல்வாக்கு ஓங்கும். நாம் எதிர் பார்க்கிறபடி இவையெல்லாம் நேரிடு மானால் மூன்று வல்லரசுகளுக்கும் இப் போதுள்ள ஒற்றுமை நீடித்திருக்கப் போவதில்லை என்பது நிச்சயம். ஐரோப் பாவில் சோவியத் ருஷியா ஆதிக்கம் பெறுவதைத்தடுக்கப் பிரிட்டன் ஏதாகி லும் சூழ்ச்சி செய்யுமானால், மீண்டும் இருநாடுகளுக்கும் மனஸ்தாப மேற்பட்டு அது யுத்தத்தில் முடியலாம். அல்லது சோவியத் ருஷியா பசிபிக்கில் ஆக்கம் பெற்று சீனாவிலும் தலைகாட்டுமானால், சீனாவைத் தன் பிரதேசம் போலக் கருதி வரும் அமெரிக்கா மனஸ்தாபமுற்று, தனியாகவோ, பிரிட்டனுடன் சேர்ந்தோ சோவியத்துடன் யுத்தஞ்செய்ய நேரிட லாம். இங்ஙனமாக அந்தரங்கத்தில் பரஸ் பரமான பொறாமைகளும் பீதிகளும் உடைய இம் மூன்று வல்லரசுகளிடம் உலகின் எதிர்காலப் பாதுகாப்பு அளிக் கப்பட்டிருப்பது விந்தையாயிருக்கிறது. மும்மூர்த்திகளுக்குள் இவ்வளவு வேற்று மைகள் இருக்கும்போது இவர்கள் இப் போது காட்டும் ஒற்றுமை நீடித்திருக்கு மென நாம் எங்ஙனம் எதிர்பார்க்கமுடி யும்? உலகம் பாதுகாக்கப்பட வேண்டு மானால், அது உலகிலுள்ள எல்லா நாடு களும் எல்லா மக்களும் சரிசமானமாக நின்று ஒத்துழைப்பதனால்தான் முடியும். சிறு நாடுகளின் சுதந்திரங்களைப் பறித்து அவற்றின்மீது ஆதிக்கஞ்செலுத்த விரும் பும் ஒருசில வல்லரசுகளின் ராணுவபலம் உலகில் நிரந்தர சமாதானத்தை நிறுவ முடியாது. இம் மூன்று வல்லரசுகளும் நீண்டகாலம் ஒற்றுமையுடன் நிற்பதை காலம்தான் காட்ட முடியும்.

## பிரிட்டிஷ் சாம்ராஜ்ய உறுப்பினர் மகா நாடு

பிரிட்டிஷ் சாம்ராஜ்ய உறுப்பினர்கள் மகாநாடு இப்போது இங்கிலாந்தில் நடைபெறுகின்றது. சர்தார் பணிக்கர் ராவ்பகதூர் சிவராஜ், பெடரல்கோர்ட்டு நீதிபதி சர். சபருல்லாகான் ஆகியோரும் அரசாங்கத்தாருக்கு நல்ல பிள்ளைகளாக இருந்துவரும் மற்றும் சிலரும் இந்தியப் பிரதிநிதிகளாக மகாநாட்டை அலங் கரித்து வருகின்றனர். இம்மாதம் 17-ந் தேதியன்று நடந்த முதற் கூட்டத்தில் இந்தியக் கோஷ்டியின் தலைவரான சர். சபருல்லா இந்தியா நிலைமைபற்றி அழுத்தந்திருத்தமாகப் பேசியிருப்பது குறிப்பிடத்தக்கது. அவர் கூறியிருப்ப தாவது:

“இதர நாடுகளின் சுதந்திரத்திற்காக யுத்த காலங்களில் 25 லட்சம் இந்தியத் துருப்புக்கள் போராடிக்கொண்டிருக்க, தங்கள் சொந்த நாட்டின் சுதந்திரத்திற் காக அவர்கள் உங்களை மண்டியிட்டு வேண்டுகோள் செய்துகொண்டிருப்பது உங்களுக்கு விபரீதமாகப் படவில்லையா? இந்தியா இன்னும் எவ்வளவு காலம் பொறுத்திருக்குமென்று நீங்கள் எண் ணிக்கொண்டிக்கிறீர்கள்? இந்தியா வேக மாக முன்னேறிச் சென்று கொண்டிருக் கிறது. நீங்கள் அதற்கு உதவியாக நிற் கலாம்; அல்லது அதற்கு முட்டுக்கட்டை கள் போடலாம். நீங்கள் என்ன செய்த போதிலும் அதன் முன்னேற்றத்தைத் தடுக்கமுடியாது என்பதை நீங்கள் மன தில் வைத்துக்கொள்ளவேண்டும். நீங் கள் இஷ்டப்பட்டால் அதைக் காமன் வெல்த்துக்குள்ளேயே சுதந்திர நாடாக இருக்கச்செய்யலாம். இல்லையேல் காமன்வெல்த்தின் தயவில்லாமலேயே அது எப்படியாவது சுயேச்சையடைந்தே தீரும். இந்தியா நீண்டகாலம் உங்கள் ஆதிக்கத்தின்கீழ் இருப்பதில் அதிருப்தி யடைந்து தன் பொறுமையை இழந்து விட்டிருக்கிறது. போருக்குப்பின் நடக் கப்போகும் புனருத்தாரண அமைப்பில் தனக்குரிய இடம் கிடைக்குமோ கிடைக் காதோ என்ற ஐயம் அதற்கு ஏற்பட் டிருக்கிறது. சீனாவை நீங்கள் ஒரு வல் லரசாக மதிக்கிறீர்கள், இந்தியா, சீனா வுக்கு எந்த விஷயத்திலும்சளைத்ததில்லை. பார்க்கப்போனால் எல்லாத் துறைகளி லும் இந்தியா சீனாவைவிடப் பன்மடங்கு அபிவிருத்தி யடைந்துள்ளது. இந்தியா வில் வேற்றுமைகளும் வகுப்புப் பிணக்கு களும் இருக்கின்றனவே என்று நீங்கள் சாக்குப் போக்கு சொல்லலாம். ஆனால் இது சீனாவில் கொமிங்டாங் கட்சிக்கும் பொதுவுடைமைக் கட்சிக்கு மிடையே யுள்ள வேற்றுமைகளைவிட மோசமான தல்ல.”

இந்தியத் தலைவரின் பேச்சுக்குப் பதி லளிக்கும் தோரணையில் பிரிட்டிஷ் பிரதி நிதியொருவர், பிரிட்டிஷ் அரசாங்கத் தார் இந்தியாவுக்கு டொமினியன் அந் தஸ்து அளிக்கக் காத்துக்கொண்டிருக் கிறார்கள் என்றும் 1942-ம் ஆண்டு அறிக்கையில் வெளியிட்டுள்ளபடி இந் தியா தானாக சுயராஜ்யமடையும் நாளைத் தாம் எதிர்பார்த்துக் கொண் டிருப்பதாகவும் தேனொழுகப் பேசினார்.

மகத்தான போர் நடந்துகொண்டிருக் கையில், பணச்செலவையும் காலச் செல வையும் பொருட்படுத்தாமல் மகாநாடு களைக்கூட்டி, வியர்த்தமான பேச்சுக் களையெல்லாம் பேசிக் கலைந்துபோவதில் பயனென்ன என்று கேட்கிறோம். பிரிட் டன் அந்தரங்கசுத்தியுடன் இந்தியாவின் விடுதலைப்பிரச்னையைத் தீர்க்கவேண்டும். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள ஜனங் களில் 75 சதத்திற்குமேல் வதியும் இந்திய நாட்டின் ஜீவிய பிரச்னையைக் கவனித்து ஒரு திருப்திகரமான முடிவு செய்யா விடின் இம் மகாநாடு பயனற்றதாகும். இந்த அரிய சந்தர்ப்பத்தை பிரிட்டன் இழந்தால் இந்திய மக்களின் விசுவா சத்தை அது மீண்டும் பெறப்போவ தில்லை. இந்தியாவில் அதிருப்தியும் மனக்கசப்பும் எவ்வளவு தூரம் பரவியுள் ளது என்பதை அறியாதாரே, 1942-ம் ஆண்டு வெளியிடப்பட்ட அறிக்கையை யும் பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்தை யும் பற்றிப் பேசுவர். நல்லெண்ணத் தைக் காரியத்தில் காட்டவேண்டும். அவ்விதம் செய்யாமல் வியர்த்தமான பேச்சுக்களால் உலகத்தாரை வெகு காலம் மயக்கிக்கொண்டே போகமுடி யாது.

**நோட்டீஸ்**

திருச்சி சப்-கோர்ட்டு

O. P. 57/1944.

கஸ்பா திருப்பூரில் புரோக்கர் தெருவி லிருக்கும் ஷண்முக சுந்திரம் செட்டி யார் பாரியாள் ரெத்னவதி அம்மாள் —மனுதார் வாதி.

தி. கோ. கள்ளத்தெருவிலிருக்கும் பரமசிவம் பிள்ளை பாரியாள் சிவ பாக்கியத்தம்மாள் ... 1

ஷை யார் குமாரர் T. P. ஷண்முக சுந்திரம் பிள்ளை ... 2

எதிர்மனுதார்கள் பிரதிவாதிகள்.

ஷை நெ. எதிர்மனுதார்கள் பிரதி வாதிகளுக்கு நோட்டீஸ்:—

ஷை நெம்பரில் மனுதார் வாதி C. P. C. order 33 Rule 1 படி பாப்பராக வியாஜ்யம் செய்திருக்கிறபடி யால் ஷை எதிர்மனுதார்கள் பிரதிவாதி களுக்கு ஏதாவது ஆக்ஷேபனை யிருந்தால் 27—2—45 தேதியன்று சமூகம் கோர் டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ள வும் இல்லாவிடில் Exparte ஆக மனு முடிவு செய்யப்படும்.

(Sd) K. Srinivasa Iyengar, M.A., B.L., Vakil.

Trichinopoly 21—2—45.

சிறு கதை

"கஜமுகன்"

# ★ குறைப்பட்டவள்? ★

காலை ஏழு மணியிருக்கும். எங்கும் பனி மூடிக்கொண்டிருந்தது. குளிர் வெட வெட வென்று நடுக்கிற்று. நண்பன் ரங்கன் வீட்டுக் கதவு சாத்தியிருந்தது. மெதுவாகக் கதவைத் தட்டினேன். சிறிது நேரம் பதிலேயில்லை. "ரங்கா" என்று குரல் கொடுத்தேன். பதில் குரல் வரவில்லை. காலடி ஓசை மட்டும் கேட்டது. கதவு திறந்தது. இருபது வயதிருக்கும், ஒட்டி உலர்ந்த முகத்துடனும் எண்ணெய் தடவாத தலையுடனும் செம்பட்டை மயிர்பறக்க ஒரு பெண் காட்சியளித்தாள். அவள் அழகில்லாதவள்தான். ஒரு விநாடிதான் அவள் முகத்தை என்னால் பார்க்க முடிந்தது. அந்த ஒரு விநாடியில் அவளுடைய பரிதாபகரமான உருவம் என் மனத்திரையில் பதிந்துவிட்டது. அவள் தன் ஜாதிக்குரிய வழக்கப்படி தன் புடவையை உடுத்திக் கொண்டிருந்ததிலிருந்து அவள் மணமானவள் என்று தெரிந்துகொண்டேன். நெற்றியிலிருந்த திலகத்தினின்று அவள் வாழ்க்கையில் குறைப்பட்டவளல்ல என்பது திட்டமாக விளங்கியது. "ஏன் அவள் அவ்வளவு பரிதாபகரமாகத் தோற்றமளிக்க வேண்டும்? அவள் வாழ்வில் ஏதோ துக்ககரமான சம்பவம் ஏற்பட்டிருக்க வேண்டும், இல்லாவிடில் 20 வயதுப் பெண் அவ்வளவு சோகப் பதுமையாகக் காட்சியளிப்பதற்குக் காரணமேயில்லை." இவ்வாறு என் மனம் சிந்தனைச் சுழலில் சிக்கித் தவித்தது.

"அவர் இல்லை" என்ற தணிவான குரல் கேட்டதும் "சரி" என்று சொல்லிவிட்டு வந்தவழியே திரும்பினேன். பாதிதூரம் செல்லும் பொழுது ரங்கன் எதிரே வந்தான். "எங்கேடா இந்தக் குளிரில் கிளம்பினாய்?" என்றேன்.

"சம்சாரமப்பா சம்சாரம்! உன்னைப் போல நாடோடிப் பிரும்மச்சாரியா நான்? சம்சாரம் சாகரமல்லவா?" என்று, தான் சம்சார பந்தத்தில் மாட்டிக் கொண்ட குறையை வழக்கம்போல் அழ ஆரம்பித்துவிட்டான்.

ரங்கனை "எங்கே போயிருந்தாய், ஆபீஸுக்கு ஏன் நாழி கழித்து வருகிறாய், பாட்டுக் கச்சேரிக்கு ஏன் வர முடியாது......?" என்ற மாதிரிக் கேள்விகளைக் கேட்டால் அவனால் ஒரே ஒரு பதில்தான் சொல்ல முடியும்! அது தான், "சம்சாரம்!". அவன் ஒரு அதிசயப் பிரகிருதி. தற்காலத்து நாகரீகம் அவனை அண்டுவதற்குப் பயந்து கொண்டுதான் இருக்கிறது. காலை எழுந்து ஜபதபங்கள், வைஷ்ணவக் குறியான பட்டை நாமம் இவைகளை அவன் விட்டதே யில்லை. அவனிடம் ஏதாவது நமது சாஸ்திரங்களைப்பற்றிக் குற்றமாகவோ குறைவாகவோ பேசினால் வந்துவிடும் கோபம்! கையையும் காலையும் வீசிக்கொண்டு பேச ஆரம்பித்துவிடுவான். "ஏண்டா இவனுடன் வாக்குக் கொடுத்தோம்" என்று ஆய்விடும். அவனுக்கு மொத்தத்தில் நான் இட்ட பெயர் "பிக்ஷூ!"

"சரி, சம்சாரமெல்லாம் கிடக்கட்டும், உன் வீட்டில் ஒரு பெண் இருக்கிறாளே அவள் யார்?" என்றேன். இதுவரை நான் எவ்வளவோ தடவை அவன் வீட்டிற்குப் போயிருக்கிறேன். ஆனால் அந்தப் பெண்ணைப்பற்றிக் கேட்டதில்லை. ரங்கன் குடியிருக்கும் வீட்டுக்காரரின் தங்கை என்பது மட்டும் எனக்குத் தெரியும்.

"இத்தனை நாட்கள் கழித்து இன்று என்னடா, காலம் கார்த்தாலை அவளைப் பற்றி அக்கறை வந்தது உனக்கு" என்றான்.

"இன்றுதான் அவளை நேரில் பார்க்க முடிந்தது. ஏன் மிகவும் வருத்தத்துடன் காணப்படுகிறாள்?', என்றேன்.

"எனக்கொன்றும் சரியாகத் தெரியாது........." என்றான். அவன் பொய் சொல்கிறான் என்று எனக்குத் தெரியும். அப்பொழுது நான் விஷயத்தை மேலும் கிண்ட விரும்பாமல் பேச்சை அத்துடன் நிறுத்திக்கொண்டு அவனிடம் சென்ற காரியத்தை முடித்துக்கொண்டு வீடுவந்து சேர்ந்தேன்.

என் அக்காவிற்கு ரங்கன் வீட்டுக்காரர் குடும்ப விஷயம் கொஞ்சம் தெரியுமாதலால் அவள் வாயைக் கிண்டினேன். "கோபாலய்யங்கார் வீட்டிலொருவள் இருக்கிறாளே அவள் ஏன் அங்கு இருக்கிறாள்? என்றேன்.

"கேட்கிற கேள்வி விசித்திரமாயிருக்கிறதே! அண்ணா வீட்டில் தங்கை வந்திருக்கக் கூடாதா என்ன!"

"வந்திருக்கலாம். ஆனால் அவள் ஏன் ஒரே துக்க மயமாய் இருக்கிறாள்?"

"ஏதோ உடம்பு சரியாக இல்லையென்று இங்கு வைத்தியம் செய்து கொள்ளுவதற்காக கொண்டு வந்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள்.

எனக்குச் சற்று ஆச்சர்யமாகவேயிருந்தது. தென்னிந்தியாவிலில்லாத வைத்தியனா வட இந்தியாவில் இருந்து விடப் போகிறான்! அப்படி வைத்தியம் செய்வதாகவும் தெரியவில்லை.

"யாரிடம் வைத்தியம் செய்துகொள்ளுகிறாள்?

"யாரோ, நாட்டு வைத்தியரிடம் தான் காட்டுவதாகச் சொன்னார்கள்!" என்றாள்.

சரி, இதைத் தவிர வேறு விஷயம் அவளுக்குத் தெரிந்திருக்காது என்று முடிவு கட்டிக்கொண்டு அவளைக் கேள்விகள் கேட்பதை விட்டேன்.

தனிமையாக உட்கார்ந்து யோசித்தேன். யாரோ முன்பின் தெரியாத அவளைப்பற்றி என் மனதில் ஏன் இவ்வளவு அக்கறையும் ஆவலும் உண்டாயிற்றென்று தெரியவில்லை. அவளைப் பார்த்த மட்டில் அவள் தேகத்தில் ஒருவித வியாதியுமிருப்பதாகத் தெரியவில்லை. "வியாதி" என்று கூறுவது பொய்யென்றுதான் எனக்குத் தோன்றியது. அந்த வீட்டில் நாலைந்து வயதில் ஒரு குழந்தை இருந்தது. அது அவளுடைய குழந்தை என்று தெரிந்ததும் இன்னும் என் மனம் சிந்தனையிலீடுபட்டது.

மறுபடியும் ஒரு தடவை ரங்கனிடம் இந்த விஷயத்தைப்பற்றிக் கேட்பது என்று தீர்மானித்து அவன் வீட்டிற்குப் போனேன், அப்பொழுது வீட்டில் ரங்கன் மட்டும்தான் இருந்தான். மற்றவர்கள் எல்லோரும் எங்கேயோ வெளியே போயிருந்தார்கள்.

"ஏண்டா பிக்ஷூ! வீட்டில் ஒருவருமில்லையா?" என்றேன்.

"இல்லை" என்றான்.

"எங்கே"

"கோவிலுக்குப் போயிருக்கிறார்கள்."

"அந்தப் பெண் கூடவா?"

"ஆமாம்."

"ஏதோ வியாதி என்றல்லவா வைத்தியம் செய்ய இங்கே கூட்டிக்கொண்டு வந்திருக்கிறார்களாம்?"

"வியாதியுமில்லை கத்திரிக்காயுமில்லை!",

"பின் ஏன் இங்கு இருக்கிறாள்?"

"பிறந்த வீட்டில் பெண் வந்திருக்கக் கூடாதா என்ன?"

"வரலாம். ஆனால் வெகு நாட்கள் இருப்பதாகத் தெரிகிறதே!"

"எனக்கும் தான் புரியவில்லை. நான் வந்து இரண்டு வருஷங்களாகின்றன. நான் வந்ததிலிருந்து அவளும் அவள் குழந்தையும் இங்குதானிருக்கிறார்கள். யாராவது கேட்டால் 'வியாதி, வைத்தியம்' என்கிறார்கள்!" என்றான் ரங்கன்.

"நீ கொஞ்சம் துப்பறிவதுதானே!" என்றேன். "என் சம்சாரம் தலைக்கு மேல் இருக்கும்பொழுது துப்பாவது அறிவதாவது!" என்றான்.

"ஆரம்பித்துவிட்டாயா உன் பல்லவியை!"

"வேறு என்ன செய்யச் சொல்லுகிறாய்? ஊரிலே எவ்வளவோ நடக்கும். இதெல்லாம் நான் விசாரித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியுமா?"

"அடடா! பிறர் வழிக்கே போகாத சாதுப் பிள்ளையல்லவோ! போடா பிக்ஷூ! வீட்டில் இரண்டு வருஷம் இருக்கிறானாம்; ஒரு பெண், குழந்தையுடன் பெற்றோர்களிடமே இருக்கும் காரணம் தெரியவில்லையாம்!" என்றேன்.

"இதோபார் வெங்கிட்டு! இந்த விஷயத்தை என் மனைவி மூல்யமாய் அறிந்து நான் நாளை உனக்குச் சொல்லாவிடில் என் பெயர் ரங்கனில்லை!" என்றான்.

எனக்கே ஆச்சர்யமாயிருந்தது அவனுடைய சபதம்.

மறுநாள் ரங்கனிடமிருந்து அவன் வாக்குப்படியே கொஞ்சம் தகவல் கிடைத்தது. அதாவது அந்தப் பெண் தன் வயது சென்ற மாமன் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டவள் என்ற செய்திதான். அவள் வாழ்க்கை ஒரு கிழவனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது. அவ்வாழ்க்கையில் அவள் வெறுப்புக் கொண்டு அவனை நிராகரித்துத் தன் பிறந்தகத்திற்கு வந்தாளோ அல்லது கிழவனே அவளுடைய கோரமான ரூபத்தைக் கண்டு வெறுத்து நிராகரித்து விட்டானோ தெரியாது! அவள் வாழ்க்கை வாண்டுவிட்டது. அதில் இளமை இன்பங்களெல்லாம் கருகி மடிந்துவிட்டன. அந்த ஏக்கமே அவளது முகத்தில் துக்கமாகப் பிரதிபலித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைத்தேன். ஒரு குழந்தையினால் அவள் ஜீவன் தரித்திருக்கிறது போலும்.

★



அழிக்கப்பட்ட ஜப்பானிய யு. எஸ். வெடி விமானம் டெலிபோன் ஸ்தம்பமாக உபயோகமாகிறது.

# எழுதிச் செல்லும் விதியின் கை...

(ஊ. பா. குமாரசாமி)



உதயசூரியனைப் பிடிக்கப் போவது போல் கிழக்கு நோக்கிப் போகும் அந்த ஒற்றையடிப் பாதையிலே ஒரு உருவம் விரைந்து செல்கிறது. உரம் பாய்ந்த அதன் உடம்பு வலுவுடன் இருக்கும் போதே கையில் தடியும் பிடித்திருக்கிறது; தான் 'தடிதாங்கிய தண்டல்காரன்' என்பதை அறிவிக்க.

இளவயதானாலும் பேசும்போது குரலில் நடுக்கம் இருக்கிறது; தான் கீழ் சாதி என்பதைக் காட்ட.

அந்நேரத்தில் காடு, தோட்டங்களுக்குச் செல்பவர்கள் இரண்டு வேலிக்கு அப்புறம் போவதைக் கண்டுவிட்டாலும் "சாமி" என்று பலமாகக் கும்பிடு போட்டுவிட்டு அப்புறம் நடைபோடுகிறான்.

அது கோடைகால ஆரம்பமாகிய மாசி மாதம். அவன் கிராமத் தலையாரி. கிஸ்து வசூலுக்குப் புறப்பட்டிருக்கிறான். பனிமூட்டம் கலையாத அந்த காலைப் பொழுதிலே அவன் பாதி வழி தாண்டி விட்டால்தான் சாப்பாட்டிற்கு வீட்டுக்கு வர முடியும்.

"உருக்கிவிட்ட தங்கம் போல் சூரியனின் கிரணங்கள் விழுகின்றன". மிகவும் அற்புதமான வர்ணிப்புத்தான்!

ஆனால் அந்தக் கவிஞரின் உடம்பிலே அந்த உருக்கிய தங்கத்தை ஊற்றினால் அந்த சுகத்தை அவர் அறிந்திருக்கலாகும். அந்தக் காலை வேளையில் பித்தத்தைக் கிளப்பிவிடும் 'பொன்னிறக் கிரணங்கள்' அவன் மேல் சுரீர் என்று தைத்தன.

நடையைக் கொஞ்சம் வீசிப்போட்டான். இன்னும் இரண்டு காடு தாண்டினால் அவன் போகவேண்டிய ஊர் வந்துவிடும்.

* * *

"சாமீ"...... உரத்த குரலில் அவன் கூப்பிட்டான். பதில் இல்லை.

"சாமி சாமீ......" இன்னும் கொஞ்சம் பலமாகக் கத்தியபின் சமையல் கட்டிலிருந்து பதில் அலை மோதி வந்தது.

"ஏண்டா கழுதை கத்தறே! இருரேன்". கும்பி கூழுக்கு அழும் போது அவனால் மெதுவாக மிருதுவாக கூப்பிட முடியவில்லை.

கவுண்டர் வெளியே வருகிறார்.

"ஏண்டா செல்லா, எங்க வந்தே?"

"சாமி, வாயிதாப் பணத்துக்குத் தானுங்க"

"கௌம்பிட்டிங்களாடா தாவியை அறுக்காதுக்கு. அவனவன் மேட்டாங் காட்டுலே இருக்கறத்தையும் வெதச்சுப் போட்டு உக்காந்திருக்கரப்போ ஒங்களுக்கு வாயிதா குடுக்கிலின்னு தான் அழுகுதாக்கும்"

எக்காரணத்தைக் கொண்டும் கந்தாயம் கொடுக்காமல் தீராது என்று அவருக்குத் தெரியும். மணியகாரர் வந்திருந்தால் இவ்வளவுக்குள் திண்ணைமேல் பாய்விரித்தாயிருக்கும். காபி சாப்பிட்டாயிருக்கும். வெத்திலை பாக்குத் தட்டத்தோடு நோட்டுகளும் வந்திருக்கும்! ஆனால் வந்திருப்பது பறயன்தானே.....காரியமில்லாமலாவது அவனை இரண்டு திட்டலாமல்லவா?

"அம்மணி, அந்த உரிச்சட்டிலேருந்து அவனுக்கு பத்தரைப் பணம் கொணாந்து கொடு." உள்ளுக்கு உத்திரவு போட்டுவிட்டு தோட்டியிடம் நாட்டு வளப்பம் விசாரிக்க ஆரம்பித்தார் கவுண்டர்.

"ஏண்டா, மணியகாரு வீட்லே தானா"

"ஆமாமுங்க. வூட்லேதானுங்க இருக்காரு"

"அந்த மயிலைக் கண்ணு வித்துப் போடறமின்னாரே, வித்தாச்சா?"

"இல்லிங்க, நம்ம தொட்டிய வள்ளு நாய்க்கருதான் வந்து கேட்டுக்கிட்டிருந்தாருங்க. என்னமோ வெலை எசையுலே போலிருக்குங்க. போயிட்டாரு."

"ஏண்டா செல்லா, முண்ணுத்தி முப்பதுக்குத்தா நான் கேட்டேன். அவரு எம்பது சொல்றாரு, பொரு மாடா" இது மந்திராலோசனை.

"கண்ணு நல்ல சாதி மயிலையுங்க. பளயகோட்டைக் கண்ணுக்கு அந்த வெலை கூட இல்லின்னு எப்பிடிங்க. ஏதோ அறுவது அம்பதோடே கேட்டுப் பாருங்க. ஆன குடுப்பாருன்னு தோணுலிங்க."

"சரி, நான் சாயங்காலம் வரேன். வேறே ஆருநாச்சியும் வந்தாலும் கண்ணு வெலை தீத்தாச்சுன்னு சொல்லச் சொல்லிறு. மணியகாரருகிட்டெ சொல்லு. நா கண்டிப்பா வரேன்"

பணம் வாங்கியாயிற்று. தலையைச் சொரிந்து கொண்டு நின்றான் செல்லன், ஒரு அசட்டுச் சிரிப்புடன்.

'ஏண்டா.'

"கொஞ்சம் பளய தண்ணி ஊத்தச் சொல்லுங்க. கோளிகூப்பட பொறப்பட்டுணுங்க. வவுத்திலே ஒண்ணுமில்லிங்க. இன்ன ரண்டுமூணு ஊரு போவனுமிங்க."

"ஆத்தா, கொஞ்சம் பழசு கொணாந்து ஊத்திறு."

ஒரு வழியாக வயிறு ஆறிற்று.

'கருமமே கண்ணனை' அவனது கால்கள் அடுத்த ஊரைப் பார்க்கக் கிளம்பின.

* * *

பன்றிகள் சுற்றித்திரியும் அந்த வீதிகளில், இரண்டு சுற்றிப் போகும் இடத்தில் உள்ள பத்துப் பதினைந்து குடிசைகளில் ஒன்று கொஞ்சம் நல்ல நிலையில் யில் இருக்கிறது.

வாசலில் ஒரு ஆடு கட்டியிருக்கிறது. கொள்முதல் இல்லாமல் கிடைத்த அதன் இரு குட்டிகளும் பக்கத்தில் படுத்துக் கிடக்கின்றன. ஒரு உரியும் இரண்டு பானைகளும் நான்கைந்து சிறு சட்டிகளையும் கொண்ட சமையல் அறைதான் அக்குடிசையின் முக்கால் பாகம். பாக்கி இடத்தை மூன்று குழந்தைகளும் ஒரு ஸ்திரீயும் அடைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

அங்கே மௌனம் நிலவுகிறது. அடுப்பு இருக்கிறது. அதன் மேல் சட்டியைக் காணோம்.

இந்தக் காட்சி அந்தக் குழந்தைகளுக்கு 'இன்று காலையில் கஞ்சி கிடையாது' என்னும் உண்மையை நன்றாக விளங்க வைத்தது. எனவே சச்சரவு இல்லாமல் குடும்பம் அமைதியாக நடக்கிறது!

அந்தப் பெண் மட்டும் ஏதோ நம்பிக் கையில் வாசலையும் அதன் வழியாகத் தெரியும் பனைமரத்திருப்பத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

சற்று நேரம் சென்றது.

அந்த திருப்பத்தில் கைத்தடியை நடுவில் உறுதியாகப்பற்றி நடையின் வேகத்துக்குத் தக்கபடி வீசி நடந்து வருவது செல்லன்தான். மணியகாரர் வீட்டுக்கு போகும் வழியில், தன்வீட்டையும் பார்த்துப்போக ஆவல்.

இரவு சாப்பிட்டது தான், கடைசி உருண்டைக் கழி என்று அவனுக்கு நினைவு இருக்கிறது. காலமே சோத்துக்கு ஆதாரிக்கருப்பராயன்தான் ஏதாவது அற்புதம் செய்திருக்க வேண்டும். கொஞ்ச நாளுக்கு முன்பாயிருந்தால் அவளும் ஏதாவது சம்பாதிப்பாள். இப்போது அவள் புள்ளைத்தாச்சி. குடும்பம் நடக்க வழியின்றி உட்கார்ந்திருக்கிறது!

'ஏம் புள்ளே, சும்மா உக்காந்திட்டே.'

'பின்னென்ன. ஆட்டங்கட்டச்சொல்றயா'

'கஞ்சி கிஞ்சி காச்சிலியா.'

'மண்ணைப் போட்டு காச்சினா கஞ்சி ஆயிறுமா'

அவனுக்கும் இந்த அற்புதம் செய்யத் தெரியாது!

பேசாமல் தலையைப் பிடித்துக் கொண்டு நடையில் உட்கார்ந்துவிட்டான்.

'என்னடா சாமி பண்ணரது' அவன் மூளை குழம்பவும் முடியாத நிலையில் இருந்தது!

'யார் இருக்கிறார்கள் உதவி செய்ய?'

'ஏன் நான் தான் இருக்கிறேனே!'

மடியில் இருந்த ரூபாக் குஞ்சுகள் சம்பந்தப்பட்டன யோசனையில்.

'நீ இருந்து என்னப்பா பண்ரது?'

'ஊட்லே கொடுத்தா அவ ஏதாவது ராயி குருணை வாங்கியாறுவா இல்லே.'

'மணியகாருக்கு ஒங்க தாத்தன போயி கும்பிடு போடுவான்.'

'அட, சொர்தாப்பா, இந்த இந்த மாதிரின்னு சொல்லி கால்லே உளுந்தா 'தொலெஞ்சு போடா களுதை' ன்னு முடிக்கி உட்றாரு.'

'உம், அதெப்படி? உம்' செல்லனின் மனம் ரூபாயின் பேச்சுக்கு இணங்க யோசித்தது. இவன் முகத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த மனைவியின் குழி விழுந்த கண்களையும் அவள் இருக்கும் நிலையையும் கண்ட அவன் ஒரு முடிவுக்கு வர மறுபடி யோசிக்கவே இல்லை.

'இந்தா, இதைக் கொண்டு போயி ராயி வாங்கியாந்து வை. நான் போயி மணியகாரரைக் கண்டுட்டு வரேன்.'

மணியகாரர் வீட்டை நோக்கி நடந்த செல்லனின் மனம் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தது.

'பணம் வசூலானதைச் சொல்லாமல் படிக்கு நாளைக்கு எப்படியாவது சுதாரித்துக் கொடுத்துவிட்டால் போகிறது. இன்று கிடைக்கும் வசவாவது மிச்சமாகுமல்லவா!'

இது உறுதிப்பட்டது.

மணியகாரரின் வீட்டு முன் வாசல் திண்ணை காலியாக இருந்தது. அவர் இல்லை. சொல்வதற்கு இன்னும் கொஞ்சம் சாவகாசம் கிடைத்தது. நேற்று வெட்டியதில் மீதி இருந்த கட்டையைப் பிளந்து கொண்டு நின்றபோது 'டேய்' என்று சப்தம் கேட்டு திரும்பினான்.

மணியம் நிற்கிறது.

'ஏண்டா, போனது என்னாச்சு'

'சாமி' என்று குனிந்து கும்பிடு போட்டுவிட்டு 'எசமான், அந்த நாகநாக்கரு என்னமோ ஒங்ககிட்ட வெதச் சோளம் வாங்கின பணம் கொடுக்கனுமங்களாம். அதேயும் சேர்த்து சந்தையணிக் குகொணாறுமினுங்க. காட்டாள் தோட்டத்து கவுணன் நாளக்கி மசமசன்னு இருக்கறப்பவே இங்கே வாரனுங்க. அப்புறம் எல்லாம் நாளைகளிச்சு வரச் சொன்னுங்க. ஒருத்தனுங் குடுக்கிலிங்க' என்று ஒரு விதமாய் சமாளித்துக் கொண்டு அடித்து விட்டான்.

'ம்' என்று முனகிவிட்டு மணியகாரர் தோட்டம் பார்க்கப் போய்விட்டார்.

ஃ ஃ

பொழுது சாய்ந்தது.

மணியகாரரிடம் சொல்லிவிட்டு வீட்டுக்கு போகலாம் என்று வாசல் புறம் போனான்.

அப்போது தான் பாங்கி அய்யர் வந்தார். ஏண்டா மணியகாரர் இருக்காரா" 'ஆமாஞ்சாமி' என்று சொல்லிவிட்டு செல்லன் வாசல்புறம் நின்றான்.

அய்யர் அவசர சமயங்களுக்கு மணியகாரரிடம் கைமாத்து வாங்க வருவது வழக்கம். இன்று கூட கிஸ்து பணத்திலிருந்து ஒரு ஆயிரம் வாங்கிப் போகத்தான் வந்திருக்கிறார். உள்ளுக்கு வேறு ஒருவருடன் மணியகாரர் பேசிக் கொண்டிருந்தார்.

'என்னங்க கவுண்டரே' என்று அறிவித்துக் கொண்டே அய்யர் பாயில் உட்கார்ந்தார்.

'வாங்க சாமி வாங்க' என்று இருவரும் ஏககாலத்தில் கும்பிட்டார்கள். பதிலுக்கு தம் இடதுகையைமட்டும் சற்றே உயர்த்தி விட்டு 'என்ன வசூலெல்லாம் முடிஞ்சுதா, பணம் ஆயிரம் வேணும் அதுக்குத்தா வந்தேன்.'

"அதுக்கென்ன வாங்கிட்டு போங்க. இருசாலுக்கு இன்னம் அஞ்சு நாளுத் தான் இருக்குதுங்க. சீக்கிரமா அனுப்பிப்பிடுங்க"

"ரண்டு நாள்ளே அனுப்பறேன். டிராப்டு வந்திருக்குது. மாத்தி அனுப்

(15-ம் பக்கம் பார்க்க)

இந்த வாரம்

எஸ். வெங்கடாசல சோதிடர்

# உங்கள் எதிர்காலம்



1. மேஷம் :— தொழில் மேன்மையும், பிறர் உபகாரமும், புது நண்பர், பந்துக்கள் சந்திப்பு திரேக ஆரோக்கியம், உற்சாகமும் இருக்கும். வியாபாரிகள் புதிக பிரயாணத்தில் வெற்றி பெறுவர். கலைஞர் அரசியல் வாதிகள் உற்சாகமாயருப்பர். விவசாயிகளுக்கு எதிர்பாராத சிலவு. ஆயினும் நன்மை தரும். முதல் இரண்டு நாள் எதிலும் பிரவேசியாமல் இருப்பது நலம்.

2. ரிஷபம் :— தொழிலில் அபி விருத்தி, முயற்சியால் வெற்றி மனத் சந்தோஷம், நண்பர்களால் கௌரவம், நல்ல மகிழ்ச்சி ஏற்படும். இருப்பினும் பொருள் விஷயத்தில் ஏமாற்றம் அளிக்கும். அரசியல் வாதிகள், கலைஞர் விஷயத்தில் வெற்றி ஏற்படும். வியாபாரிகளுக்கு பொருள் நஷ்டம் விவசாயிகளுக்கு மாறுதல் இல்லை.

3. மிதுனம் :— தொழிலில் சென்ற வாரத்தை விட முற்போக்கு அளிக்கும். பொருள் விஷயத்தில் நன்மை, பிறர் உபகாரம் ஏற்படும். பந்துக்கள் அல்லது பிறரால் மனஸ்தாபம் வரும். வியாபாரிகளுக்கு சிறு முன்னேற்றம். கலைஞர்களுக்கு சில வெற்றி. அரசியல்வாதிகள் எதிலும் பிரவேசியாமல் இருப்பது நலம். விவசாயிகளுக்கு நன்மை ஏற்படும்.

4. கடகம் :— தொழிலில் மந்த வருமானம். பிறரால் சில இடைஞ்சல் ஏற்பட்டு நீங்கும். முயற்சியில் வெற்றியும் குடும்பச் சிலவுகளும் ஏற்படும். இவ் வாரம் பிரயாணம் செய்யாதிருப்பது நலம். வியாபாரிகளுக்கு எதிலும் ஏமாற்றம் அளிக்கும். கலைஞர்களுக்கு மன உற்சாகம் இருக்கும். அரசியல் வாதிகளுக்கு பிறரால் அவமதிப்பு ஏற்படும். விவசாயிகளுக்கு வீண் விரோதம் ஏற்படும்.

5. சிங்கம் :— தொழில் முற்போக்கு ஏற்படும். பொருள் விஷயத்தில் லாபம், புது நண்பர் சந்திப்பு, சிறு பிரயாணம், பிறர் உதவியும் உண்டு. பிரயாணம் இல்லையாயின் வீண் ஆசையால் காரியத் தடங்கலும் இகழ்ச்சியும் நேரிடும். அரசியல் வாதிகளுக்கும் கலைஞர்களுக்கும் எவ்வித நன்மையுமில்லை. வியாபாரிகளுக்கு சிறுவெற்றி. விவசாயிகளுக்கு பிறர் சகாயம் ஏற்படும்.

6. கன்னி :— தொழில் மேன்மையும் பொருள் சேர்க்கையும் ஸ்திரீ மூலம் சௌக்கியமும். புதியகாரியப்பிரயத்தனம் நண்பர் சந்திப்பு ஏற்படும். அரசியல் வாதிகளுக்கு சிறு விஷயத்தில் வெற்றி கலைஞர்களுக்கும் வெற்றிதரும். வியாபாகளுக்கு மனக்குழப்பம் ஏற்படும்.

7. துலாம் :— தொழில் தடங்கல் பயனற்ற நடத்தையும் மனதில் பயமும் எக்காரியத் தோல்வியும் இவ் வாரம் உண்டாகும். சிலருக்கு ஸ்திரீ மூலம் அவமானமும் துன்பமும் ஏற்படும். புதுவிஷயத்தில்பிரவேசியாமல்இருப்பது நலம். விவசாயிகளைத் தவிர்த்து மற்றவர்களுக்கு எவ்வித நன்மையுமில்லை.

8. விருச்சிகம்:— தொழிலில் சோம்பல், வீண் சிரமம். தாழ்மையுறுதல்; மனச் சோர்வும் உண்டு. பொருள் விஷயத்தில் நண்மையும், பிறர் உபகாரம் ஏற்படும். கலைஞர்களுக்கு மன உற்சாகமிருக்கும். வியாபாரிகளுக்கு முற்போற்கு அளிக்கும். அரசியல் வாதிகளுக்கு மாறுதல் இல்லை. விவசாயிகளுக்குச் சங்கடம் உண்டு.

9. தனுசு :— தொழில் முதலிய காரியத்தில் சுறுசுறுப்பு. பந்துக்கள் புது நண்பர் சந்திப்பு, பொருள் லாபம் மனச் சந்தோஷம் இருக்கும். எதிர்பாராத சிலவும் சில சங்கடமும் ஏற்படுத்தச் செய்யும். கலைஞர் அரசியல் வாதிகளுக்கு வெற்றி கிடைக்கும். வியாபாரிகளுக்கு பொருள் வரவும் ஏற்படும், விவசாயிகளுக்கு வீண் விரோதம். தனச் சிலவு ஏற்பட்டு நிற்கும்.

10. மகாம் :— தொழிலில் சென்ற வாரத்தை விட சிறு முன்னேற்றம், மனதிற்கு தெளிவு, பொருள் விஷயத்தில் நன்மையுண்டு. அபவாதம் வீண் பழி சுமத்தலும் வரும். கலைஞருக்கு மன உற்சாகம் ஏற்படும். விவசாயிகளுக்கும் வியாபாரிகளுக்கும் நன்மை ஏற்படும். அரசியல் வாதிகளுக்கு மாறுதல் இல்லை.

11. கும்பம் :— உத்தியோக மாறுதல் வருமானக் குறைவு ஏற்பட்டு நீங்கும். நண்பர் உபகாரமும், புதிய முயற்சியும் இருந்துவரும். பொருள் விஷயத்தில் நிலைமாற்றம் அளிக்கும். கலைஞர்களுக்கும் அரசியல் வாதிகளுக்கும் மன நிம்மதியில்லை. விவசாயிகளுக்கு வாகன லாபம். வியாபாரிகளுக்கு மாறுதல் இல்லை.

12. மீனம் :— தொழில் மந்தம் வரவுக்கு மீறின சிலவு. காரியத்தில் சிரமமும் இருக்கும். குடும்பஸ்தர்களுக்கு வீட்டில் சந்தோஷமும் சில புதிய நன்மையும் ஏற்படும். கலைஞர்களுக்கும் விவசாயிகளுக்கும் வெற்றி அளிக்கும். வியாபாரிகளுக்கு காரியத் தோல்வி ஏற்படும். அரசியல் வாதிகளுக்கு எவ்வித மாறுபாடும் இல்லை.

முன் தொடர்ச்சி

சரத்சந்திரசட்டர்ஜி

# பெண்ணின் பெருமை

மண் எண்ணெயை தேகத்தில் ஊற்றி நெருப்பைப் பற்றவைத்துக்கொண்டு இறந்த பெண்ணைக் குறித்து அனைவரும் ‘இவளல்லவா பத்தினி’ என்று புகழ்ந்தார்கள். அதாவது, இம்மாதிரி இன்னும் சிலர் இறப்பதுகூட இவர்களுக்கு சம்மதந்தான். இதிலிருந்து இந்த தேசத்தில் உள்ள ஆடவர்களின் மனப்பான்மை எம்மாதிரியுள்ளது என்பதும்; பெண்களை எவ்வளவு அடிமைப்படுத்தியிருக்கிறார்கள் என்பதும் நன்கு விளங்கும். பெண் தன்னுடன் இருக்கும் ஆணை மகிழ்விக்கவே விரும்புவான். இறந்த பெண்ணின் கையில் கீதை இருந்ததாம். கீதையில் இப்படித்தான் கூறியிருக்கிறதா? கையில் கீதையிருப்பது நல்லது என்று நினைத்திருக்கலாம். இந்தச் சமயத்தில் நமக்கு வேறு ஒன்றும் கூற விருப்பமில்லை இல்லாவிட்டால் மண்ணெண்ணெயைக் கொட்டிக்கொண்டிருந்த அந்தப் பெண்ணைப்பற்றி எவ்வளவோ கூறலாம். அவள் உண்மைப் பதிவிரதையும் அல்ல, கணவன் இறந்துவிட்டானே என்ற சோகத்தாலும் அவள் இறக்கவில்லை. பத்திரிகைகளில் மாமியார் கொடுமை பொறுக்கமுடியாமல் இறந்துவிட்டதாக அநேகம் பெண்களைப்பற்றிச் செய்திகள் வருகின்றன. இவைகளை எல்லாம் விட்டுத் தள்ளுங்கள். நாம் பதிபத்னிகளைப்பற்றியே பேசுவோம்.

கணவன் இறந்தவுடன் பெண்களுக்கு இயற்கையாகவே தற்கொலை செய்துகொள்ளலாம் என்ற எண்ணம் உதிப்பதுண்டு. இது தற்கொலை செய்துகொண்ட பெண்களை அறிந்தவர்களுக்கு நன்கு தெரியும். ஒரு பெண் மாடியிலிருந்து குதித்து இறந்ததையும் மற்றொரு பெண் தூக்குப் போட்டுக்கொண்டு இறந்ததையும் நாம் பார்த்திருக்கிறோம். விஷத்தை தின்று இறந்ததாக அநேகரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். இவ்விதம் இறப்பதும் சிதையில் எரிவதும் ஒன்றல்ல. முதல் கூறியது உணர்ச்சி வசப்பட்டு இறப்பது. இரண்டாவதோ அக்னி ஜ்வாலைக்கு வெகு நேரத்திற்கு முன்பே இந்த உணர்ச்சி அழிந்துவிடுகிறது. அப்போது தற்கொலையானது நிஜக்கொலையாகவே முடிகிறது. “ஆப்ரிக்காத் தலைவர்களின் மனைவிகள் ரொம்ப நேரத்திற்கு முன்பே தூக்குப்போட்டுக் கொள்ள கயிறு தேடிவைத்துக்கொள்ளுவார்க” ளென்று “டைலர்” கூறுகிறார். ‘பிஜித்தீவில் தலைவன் இறந்தவுடன் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு மனைவியும் இறந்துவிடுவாளாம். யாராவது தடுத்தால் அவர்களை மிகக் கொடியவர்களாகக் கருதுவார்கள்.!’ என்று ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் கூறுகிறார். மேலும் அவர் கூறுவதாவது:

‘The wives of Fijian chiefs consider it a sacred duty to suffer strangulation on the deaths of their husbands. A woman who has been rescued by Williams escaped during the night, and swimming across the river and presenting herself to her own people, insisted on the completion of the sacrifice which she had in a moment of weakness reluctantly consented to forego; and Wilkes tells of another who had loaded her rescuer with abuse and even afterwards manifested the most deadly hatred towards him’

(பிஜித்தீவில் தலைவர்களின் மனைவிகள் கணவனது மரணத்திற்குப்பின் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு இறப்பதைப் புனிதக்கடமையாகக் கருதினார்கள். வில்லியம் என்பவர் எப்படியோ ஒரு பெண்ணை அந்தச் சமயத்தில் காப்பாற்றிவிட்டார். ஆனால் அவள் இரவில் நதியைக் கடந்துகொண்டு ஓடிவிட்டாள். அவள் தன்னுடைய ஜனங்களிடம் தன்னை ஒப்படைத்துக்கொண்டு பலியைப் பூர்த்திசெய்யும்படி மன்றாடினாள். வேறொரு பெண்ணை வில்லியம் காப்பாற்ற முயலும்போது அவள் மிகுந்த கோபமடைந்து காப்பாற்றியதிற்கு கடூரமாக வெறுத்தாளாம்.)

இதிலிருகது நாம் என்ன தெரிகிறோம்? உடன்கட்டை ஏறுவது ரொம்ப கௌரவமான காரியம். ஆரியர்களைத் தவிர இன்னும் அநேக நீச ஜாதியார்கள்கூட இந்தக் கௌரவத்திற்கு அருகதை உள்ளவர்கள்தான். இன்னொரு விஷயமும் நினைவிற்கு வருகிறது. ஆண்கள் எதைச்செய்ய வேண்டுமானாலும், விரும்பினாலும் தர்மத்தின்பேரால் பிரசாரம் செய்கிறார்கள் பெண்கள் அதை நம்புகிறார்கள். புருஷர்களின் விருப்பமே தங்கள் விருப்பம் என்று நம்பி ஏமாந்து சுகமடைகிறார்கள். இதனால் பெண்ணின் பெருமை அதிகப்படலாம். ஆனால் ஆணின் சிறுமையை மறைக்க முடியாது. இந்தக் கொடூர வழக்கம் எப்படி பழக்கத்தில் இருந்தது என்று கேட்கலாம். பெண் பரலோகத்தில் சென்று சேவை செய்வதற்குத்தான் என்று உடனே பதில் அளித்துவிடலாம். இவ்வளவு கொடூரத்தையும் அநியாயத்தையும் அநுபவித்துக்கொண்டு பெண் ஆணை இவ்வளவுகாலம் நேசித்து வந்தது ஆச்சரியமாகத்தானிருக்கிறது. அவனிடம் பக்தி பூண்டிருக்கிறாள். அவனை நம்புகிறாள்! தந்தை என்கிறாள், சகோதரன் என்கிறாள், கணவன் என்கிறாள். அவளுக்குத் தான் எவ்வளவு கீழான ஜந்து என்பது தெரிந்ததே இல்லை. இங்குதான் பெண்ணின் பெருமை இருக்கிறது.

‘பில்வமங்கள்’ ஒரு பிரசித்திபெற்ற நாடகம். வெகு நாளாக இது நடிக்கப்பட்டுவருகிறது. பாரத புத்திரன் யாரும் இதைத் தடுக்கவில்லை. ஏனென்றால் இது தர்மத்தைப்பற்றிக் கூறுகிறது. மனைவியை காமதூதனை விருப்தாளி படுக்கைக்கு அனுப்புகிறான். பார்ப்பவர்கள் காசை இழந்துவிட்டு இதை வாயார வாழ்த்துகிறார்கள். அதிதி வீட்டுக்கு வந்து கோபமடைந்து போய்விடக்கூடாது. நமது பிரதிக்ஞைக்குப் பங்கம் வந்துவிடுமே என்று பயந்துவிடுகிறான். பாபம் வந்துவிடுமே, மரணத்திற்குப் பிறகு யமதூதர்கள் சித்திரவதை செய்வார்களே என்று நினைக்கிறான். சாஸ்திரத்தில்கூட சகலத்தையும் கொடுத்தாவது அதிதி சத்காரம்செய்ய வேண்டுமென்று கூறியிருக்கிறதல்லவா? தனதான்யம் எதானாலும் கொடுத்து அதிதி சத்காரம் செய்யவேண்டும். ஆனால் அதிதியோ இவைகளை எல்லாம் மறுக்கும்போது “நீ அவனிடம் போ, அவன் உன்னைத்தான் என்னிடமிருந்து கேட்கிறான் நீயும் எனது ஸ்தாவர சங்கம சொத்துக்களைப் போலத்தானே!’’ கணவனுக்கு முன் பதிவிரதைப்பெண்ணின் நிலை இதுதான்! முன்பின் தெரியாத ஒரு காமாந்தகார அதிதி சேவைதான் பெண்ணிற்குப் பெருமை!

பில்வமங்கள் பக்தன். அதிதிக்கு ஒரு ஹிந்து, பிராணனைக்கூடக் கொடுப்பான். கர்ணன் தனது புதல்வர்களைக்கூட கொன்றுவிடவில்லையா? என்று வாதம் செய்வார்கள். இவைகளெல்லாம் நமக்குத் தெரியும். கர்ணனும் பெரிய காரியத்தைச் செய்துவிட்டான். ஆனும் விஷயம் இதுவல்ல. தன் உயிர் தனக்கு மேல், நீங்கள் இஷ்டப்பட்டால் உங்கள் உயிரைக் கொடுத்துக்கொள்ளலாம். ஆனால் “மனைவி நமது சொத்து, மனைவியை நம் விருப்பப்படி அவசியம் வந்தால் என்னவேண்டுமானாலும் செய்யலாம்’’ என்பது மகாக்கொடியது! உங்களுடைய இந்தப்போக்கு புருஷ ஜாதிக்கே அவமானத்தை உண்டாக்கக்கூடியது. அதோடு உங்கள் மனைவிக்கும், என் பெண் குலத்திற்கே ஈனத்தை விளைவிக்கவல்லது.

அதிதி சத்காரம் ரொம்ப உத்தமமான தர்மமாக இருக்கலாம். ஆனால் அதற்காக நீங்கள் திருடவோ கொள்ளை அடிக்கவோ முடியுமா? பின் இக்காரியம்மட்டும் எப்படிச் செய்யக்கூடும்? காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த மக்கள் தங்கள் சொத்துக்களுடன் பெண்களையும் பங்கிட்டுக் கொள்வார்களாம். இன்றுகூட எத்தனையோ அநாகரிக ஜாதியார்கள் தங்கள்சொத்துக்களுடன் பெண்களையும் பங்கிட்டுக்கொள்கிறார்கள்.

அதிதி சத்காரத்திற்காக தன் மனைவியை கெடுப்பதுகூட தர்ம சம்மதமானதுதான் என்று வாணிகன் நினைத்தான்.

அமெரிக்காவில் உள்ள சினுக் சாதியார்கள் அதிதி படுக்கைக்கு தங்கள் புத்திரியையோ, புத்திரி இல்லாவிட்டால் மனைவியையோ அனுப்புவதுதான் சிரேஷ்டமான தர்மம் என்று கருதுகிறார்கள் என்று கப்தான் லூயிஸ் கூறுகிறார். ஆசியாவின் சுக்சீ சாதியார்களைப்பற்றி ஆர்மைன் கூறுவதாவது: “சுக்சீ சாதியார் வீட்டிற்குச் செல்லும் அதிதியிடம் மகளையோ மனைவியையோ அனுப்புவார்களாம்.’’ (The chuckchee offer to travellers, who chance to visit them, their wives and also what we should call their doughter's honour).

கப்தான் லூயிஸும் சர். ஜான்லபக்கும் எக்ஸிமோ சாதியார்களும் இதே மாதிரி அதிதி பூஜை செய்வதாகக் கூறுகிறார்கள். அந்த சாதியார்களுக்கும் நமது தார்மிக வணிகனுக்கும் என்ன வித்தியாசம்? அந்த தேசத்து ஆண்கள் எதைக் கடமையாகத் தர்மமாக ஏற்படுத்தியிருந்தார்களோ அதைக் கடைப்பிடித்தார்கள், வணிகனும் அதைத்தான் கடைப்பிடித்தான். அதிதியை சந்தோஷப்படுத்துவதில் இருவரும் சமம்தான். அதிதி சந்தோஷமடையாவிட்டால் நமக்குப் பாபம் வரும். நமக்குக் கஷ்டம் நேரிடும் என்று இருவரும் தான் கருதினார்கள். இதில் எவ்வளவு தேடினாலும் ‘நமக்கு’ என்பதைத்தவிர வேறு ஒன்றும் கிடைக்காது.

பெண் நரகத்தின் வாயில் என்று பகவான் சங்கராச்சாரியாரே சொல்லிப் போயிருக்கிறார். பைபிள், தீமையின் வித்து (root of all evil) என்று கூறுகிறது. ஐரோப்பின் பிரசித்தி பெற்ற மதபோதகர் வெடின் பெண்களைப்பற்றி “நீ சைத்தானின் வாயில், எல்லாருக்கும் முன் தேவகட்டளையை மீறுபவள் (Thou art the devil's gate. the betrayer of the tree, the first deserter of Divine Law”) என்று கூறுகிறார். அஸ்கிஸ்டன் தனது சிஷ்யர்களுக்கு பின்வருமாறு போதிக்கிறார். பெண் தாய் வடிவில் இருந்தாலும், சகோதரி வடிவில் இருந்தாலும் நாம் ஜாக்ரதையாகத்தான் இருக்கவேண்டும். ஒவ்வொரு பெண்ணிடமும் ஏவாள் குடியிருக்கிறாள்.’’ “What does it matter whether it be in person of mother or of sister: we have to be beware of Eve in every woman.’’

ஜெயின் எம்பரோஜ், “உஷார்! கடவுள் முதலில் பெண்ணைப் படைப்பதற்கு ஆணின் விலா எலும்பைத்தான் எடுத்துப் படைத்தார். அவனுடைய ஆத்மாவின் துளி அம்சத்தைக் கூடச் சேர்த்துப்படைக்கவில்லை.’’ (Remember that god took a rib out of Adam's body and not a part of his soul to make her.”) (தொடரும்.)

---

# அமுத வாக்குகள்

ஆண்டவன், நம்முடைய துஷ்டச் செய்கைகளைக் கண்டு நம் மீது கோபம் கொள்ளலாம். ஆனால் நாம் எல்லோரும் அவருடைய குழந்தைகள் என்பதை அவர் மறந்துவிடவில்லை. அது மட்டுமல்ல நாம் நம்முடைய செய்கையைக் குறித்து வருந்தும் போது நம்மை மனப்பூர்வமாக மன்னிக்கவும் தயாராகவே உள்ளார்.—ஸி. பட்மோர்,

ஜீவன் என்றும், எப்பொழுதும் எக்காலத்திலும் அழியாத் தன்மை வாய்ந்தது. ஜீவன் ஒரு உடலை விட்டு நீங்கிய பிறகு வேறொரு உருவத்திலே காட்சியளிக்கிறது. இதுதான் ஜீவாத்மாவின் தத்துவம். —யூக்ளிட்

ஒருவன் யாரிடம் பேசுகின்றானோ அவனுக்குப் பொருள் விளங்காமலும், பேசுகின்ற தனக்கே பொருள் விளங்காமலும் இருந்தால், பேசுவது தத்துவ சாஸ்திரமாகும். லால்டர்.

மோட்சம், நரகம் ஒன்றும்கிடையாது; மறு பிறப்பு என்பதும், அழியாத ஆத்மா என்பதும்இல்லை. மனிதன் பிறக்கிறான்; உயிருடன் வாழ்கிறான்; பிறகு மரணமடைகிறான்; இதுதான் உண்மை. எனவே மனிதர்கள் நேர்மையான முறையிலே நடந்துகொள்ளல் வேண்டும். மறுஜென்மம், மறுபிறவி என்ற கொள்கைகள் மக்களின் சமரஸ சன்மார்க்க வாழ்க்கைக்கே இடையூறாக இருக்கின்றது. இந்தப் பிறப்புதான் தங்களுடைய வாழ்க்கைக்கு முக்கியமானது என்று மக்கள் கருதுவார்களானால், அவர்கள் பகுத்தறிவுடன் நடந்துகொள்வார்கள் என்பதற்கையமில்லை.

—சர். வி. ராமன்.




அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. தாரண-ஹூ மாசி-மீ 14-உ. 25—2—45

# அன்னையின் ஆன்மசாந்தி

"ஒரு எழுதப்படிக்கத் தெரியாத எளியமனம் படைத்த மாதின் பெயரால் இந்த நிதி வசூலிக்கப்பட்டிருக்கிறது. அவருடைய ஞாபகார்த்தமாகச் செய்யப்படும் வேலை நூற்றுக்கு நூறு நாணயமுடையதாக இருக்கவேண்டும்."

சென்ற 15-உ கூடிய, கஸ்தூரிபா தேசீய ஞாபகார்த்த நிதியின் மாகாண காரியதரிசிகளுக்கு, அவர்கள் செய்யவேண்டிய வேலைகளைக் குறித்து உபதேசம் செய்கையில் மகாத்மா காந்தி மேற்கண்டவாறு கூறினர்.

கஸ்தூரிபா நிதிக்கு ஒருகோடியே இருபத்திநான்கு லட்சங்கள் வசூலாகியிருக்கின்றன. இத்தொகை பூராவும் ஏழு லக்ஷம் கிராமங்களிலுள்ள ஸ்திரீகள், குழந்தைகளின்பொருட்டு செலவிடப்பட வேண்டுமென்பது மகாத்மாவின் விருப்பம்.

தேசத்தின் நன்கொடைகளில் இந்த நிதி மிகப் பெரியதுதான். ஆனால் இந்தியாவின் யுத்தச் செலவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்தத் தொகை கடலில் கரைத்த பெருங்காயம்போலத்தான்.

நிதியைச் செலவிடுவது சம்பந்தமாக மகாத்மாவின் கருத்து கவனிக்கத்தக்கது. இலவச வைத்தியசாலைகள் பிரசவ விடுதிகள் இவற்றைப்பற்றி ஏராளமான ஆலோசனைகள் வந்திருக்கின்றன. நோய் வந்தபிறகு தடுப்பதைவிட, நோய் வராமலிருப்பதற்குத் தக்கபடி சுகாதார வசதிகளுக்கு ஏற்பாடு செய்வதே இன்றியமையாததென்று மகாத்மா கருதுகிறார்.

கிராமவாசிகளுக்குத் தங்கள் உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொள்ளக் கற்றுக்கொடுக்க வேண்டும். மக்களின் கஷ்டங்களுக்கெல்லாம் மூல காரணம் வறுமையும் அறியாமையுமேயாகும். அதைப்போக்குவதில் உடனடியாகக் கவனம்செலுத்தவேண்டுமென்றும் அவர் நினைக்கிறார்.

மகாத்மா காந்திஜியின் கருத்துப்படி அறியாமையையும் எழுத்தறிவின்மையையும் போக்குவதற்கு அடிப்படைக் கல்வியிலும், ஆஸ்பத்திரிகளைக் கட்டி நோய்களுக்கு சிகித்சை தருவதுடன் சுகாதார வசதிகளான குடி தண்ணீர் கிணறுகள், கக்கூஸ்கள், சாக்கடை திட்டங்கள் இவற்றையும், இந்திய மாதரின் நிலையையும் உயர்த்துவதுமே நிதி நிர்வாகிகளின் முக்கிய வேலையாக இருக்க வேண்டும்.

நம்முடைய மாதரின் நிலைமையே அடிமைத்தனத்தில் இந்தியா அவதியுறுவதற்குக் காரணமாகும். வீட்டில் பெண்களை அடிமைகளாகவும் அறிவற்றவர்களாகவும் வைத்திருக்கிறோம். அவர்கள் வயிற்றில் வீரர்கள் தோன்றுவார்களென்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

பாரதியார் கூறியது போல, மண்ணின் தன்மைதான் பயிருக்கு உண்டாகும் அல்லவா? இந்தியாவின் ஒப்பற்ற ஸ்திரீ ரத்தினத்தின் பெயரால் திரட்டப்பட்ட நிதி இந்திய மாதர் உலகின் நிலையை உயர்த்தவே பெரும்பாலும் உபயோகமாவது பொருத்தமுடையதாகும்.

சோவியத் நாட்டின் மறுமலர்ச்சிக்கு, அவர்கள் சென்ற கால் நூற்றுண்டில் தங்கள் மாதர் நிலையில் தக்க கவனம் செலுத்தியதே காரணமாகும். இரண்டு 5 வருடத்திட்டங்களில் அதாவது 1928 லிருந்து 1937க்குள் சோவியத் நாட்டில் மாதர்கள் எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டுத் தங்கள் தாய் நாட்டின் பெருமையை உயர்த்தக்கூடிய திறமை பெற்றுவிட்டார்கள்.

ஒரு நாட்டின் விடுதலைக்கோ, வளர்ச்சிக்கோ பெண்ணின் நிலையை உயர்த்துவதிலுள்ள அவசியம் இதனால் புலனாகும். இன்றுசோவியத் கல்லூரிகளில் 43 சதவிகிதம் ஸ்திரீகள் கல்வி பயிலுகிறார்கள்.

கஸ்தூரிபா நிதி நிர்வாகிகள், ஆங்காங்கு சரியான திட்டங்களின் கீழ் கிராம நிர்மாண வேலைகளை வெற்றிகரமாகச் செய்வதன் மூலம், நாட்டின் எழுச்சியையும், மலர்ச்சியையும் துரிதப்படுத்துவதே மகாத்மாவின் திருப்திக்கும், அன்னையின் ஆன்ம சாந்திக்கும் இன்றியமையாததாகும்.




இந்த வாரத்தில் ஜெர்மனியரின் எதிர் தாக்குதல் சிறிது மும்மரமாக இருக்கிறது. ஜெர்மனிக்குள் பெர்லின் நகருக்காக நடைபெறும் போரில் புது ஜெர்மன் படைகள் ஈடுபட்டுள்ளன. ஒவ்வொரு அடி மண்ணுக்காகவும் அவர்கள் உயிர் கொடுத்துப் போரிடுகிறார்கள்.

கிழக்குப் பிரஷ்யாவில் ஏராளமான சப்ளைகள் எதிரிகளுக்கு இருக்கின்றன. பல ஊர்களை ரஷ்யர் கைவிட்டு விட்டனர். செக்கோஸ்லேவியாவில் டான்யூப் நதி தீரத்தில் ஜெர்மனியருக்கு இடம் கொடுக்க வேண்டியேற்பட்டிருக்கிறது. கிழக்கு முனையில் 12 பகுதிகளில் கடும்போர் நடைபெறுகிறது

இந்த வார ஆரம்பத்தில் மேற்கு முனையில் ரீச் வால்ட் காட்டின் தென் கோடியிலிருந்து கோச் நகரை நோக்கிச் செல்ல ஆரம்பித்த நேசப்படைகள், அங்கிருந்து அனேகமாக எல்லா எதிரிகளையும் விரட்டி விட்டன. கோச் நகரில் வீடு வீடாக நுழைந்து ஜெர்மனியரை விரட்டவேண்டியதாயிற்று. சுமார் 50 மைல் அகல போர் முனையில் இங்கு யு. எஸ். சேனை தாக்குகிறது. 3வது சைன்யம் 16 ஜெர்மன் நகரங்களை பிடித்திருக்கிறது. ஜெர்மனியர் கடுமையாக எதிர்த்து கனேடிய முனையில் நேச அணியை சற்று வளைத்தனர்.

டோக்கியோவிற்குத் தெற்கே 750 மைல் தூரத்திலுள்ள போனின் தீவுகளைச்சேர்ந்த ஐவோஜீமோவில் கடும் போர் நடந்ததன் காரணமாக ஒரு விமான நிலயத்தை அமெரிக்கப் படை பிடித்தது. வழி நெடுக ஜப்பானியரின் எதிர்த் தாக்குதல் பலமாகத்தான் இருக்கிறது. பஸபிக் பிரதேசத்தில் வேறு எந்த இடத்தையும் இவ்வளவு ஆவேசத்துடன் ஜப்பானியர் காத்ததில்லை. மழையும் மேகமும் யு. எஸ். படைக்கு பாதகமாயிருக்கின்றன.

இங்கு 554 அடி உயரமுள்ள ஒரு எரி மலைக்காக கடும் போர் நடைபெறுகிறது. இதிலுள்ள குகைகளைத் தங்கள் கோட்டைகளாகவும், அடிவாரத்தைப் படைவீடாகவும் ஜப்பானியர் அமைத்துக்கொண்டிருக்கின்றனர். ஸூரிபாசுக்கு கிழக்கே ஜப்பானியர் எதிர்த் தாக்குதலினால் 4 அமெரிக்க டாங்குகள் முடமாயின. பஸபிக் கடலில் இதுவரை 25 எதிரி கப்பல்களை அமெரிக்க நீர்மூழ்கிக்கப்பல்கள் அழித்துள்ளன.

மணிலா பகுதியில் ஜப்பானிய எதிர்ப்பு இன்னும் நீடித்துக் கொண்டுதான் இருக்கிறது. காரிகிடாரில் ஜப்பானிய எதிர்ப்பு அவ்வளவாக இல்லை.

மாண்டலே பகுதியில் மூர்க்கமான போர் நடைபெறுகிறது. ராம்ரீ தீவு வசமாகி விட்டது.

14வது சைன்யம் மத்ய பர்மாவுக்குள் முன்னேற முன்னேற யுத்த நிலைமை நமக்கு அனுகூலமாகி வருகின்றது. அரக்கானில் போராடும் 15வது இந்தியப் படைக்கும் 14வது சேனைக்கும் குறுக்கே 200 மைல் நீள முள்ள மலைத்தொடர் இருக்கிறது. இதில் இரண்டு கணவாய்கள் இருக்கின்றன.

வயல் வரப்புகளின் வழியாக நேச டாங்கிகள் போயாக வேண்டும். டாங்கிகளின் கனத்தால் வரப்புகள் அழுந்தி பீரங்கிகள் உதவாமற் போவதைத் தடுக்க டாங்கிகளின் முன்னால் 5 முள் கருவி ஒன்று அமைக்கப்படுகிறது. இந்தக் கருவி வரப்புகளை உடைத்து வழி செய்யும்.

பொதுவாகப் போர் முனைகளில் இந்த வாரம் எதிரிகளின் தாக்குதலும் ஆவேசமும் அதிகமாயிருக்கின்றன.




**நிர்மாணத் திட்டங்களைப்பரப்ப பிரசாரப் படம்?**

சமீபத்தில் காந்திஜீ, ராம ராஜ்யா படத்தைப் பார்த்த பிறகு மோஷன் பிக்சர்ஸாரின் திறமையிலும் சினிமாத் தொண்டிலும் சிரத்தைகாட்ட ஆரம்பித்திருக்கிறார் என்று தெரிகிறது. டெல்லியிலிருந்து வெளியாகும் "நபவாணி" பத்திரிகை இந்தச் செய்தியைத் தருகிறது.

மோஷன் பிக்சர்ஸாரின் திறமையில் மகாத்மாவுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருப்பதன் காரணமாக, புதிதாக வகுக்கப்பட்டிருக்கும் நிர்மாணத் திட்டங்களை. அவர்களைக் கொண்டு, பிரசாரப் படமாகத் தயாரிப்பதற்கு காந்திஜீக்கு ஆக்ஷேபனையிருக்காதென்று வார்தா வட்டாரத்தில் கருதப்படுகிறது. காந்திஜீயின் சுயசரிதையை சிரத்தையுடன் உள்ளது உள்ளபடியே படம் எடுக்க முடியுமானால், அதற்குக்கூட அவரை ஒப்புக்கொள்ளச்செய்ய முடியுமென்று அவருடைய நண்பர்கள் கருதுகிறார்கள். வார்தா பிரமுகர்கள் இதுசம்பந்தமாக பிரபல டைரக்டர் ஒருவருடன் பேச்சு வார்த்தைகள் ஆரம்பித்திருக்கிறார்களாம். ஆனால் தற்போதைய யுத்த நிலைமை காரணமாகவும் சென்சார் தொந்திரவுகளினாலும் இந்தத் திட்டங்கள் உடனே நடைபெறுவது அசாத்யமாகலாம் இது வெற்றிகரமாக நடைபெறுமானால் தேசிய முக்யத்வம்வாய்ந்த வெளியீடுகளை நாம் எதிர்பார்க்கலாம்.

★

சேலம் மார்டன் தியேட்டர்ஸாரின் "சௌ சௌ" என்ற படம் புது வருடத்தின் ஹாஸ்ய படங்களின் முதல் வரிசையில் நிற்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ணன், மதுரம், காளி என். ரத்னம், டி. ஆர் ராமசந்திரன், டி. எஸ். ஜெயா, துரைராஜ், பி. ஆர். மங்களம் முதலிய அத்தனை ஹாஸ்ய நடிகர்களும்; இதில் மூன்று துண்டுப் படங்களில் நடித்திருக்கின்றனர். படம் வந்த பிறகுதான் அதன் வெற்றியைப் பற்றிச் சொல்லக்கூடுமானாலும் வசூல் பிரமாதமாயிருக்கும் என்று இப்போதே கூறிவிடலாம்.



பர்மாராணியில் கே. வி. எல். வசந்தா

"பர்மாராணி"யும் மாடர்ன் தியேட்டர் வெளியீடுதான். பிரசாரப்படமாகிய இதில், கே. எல். வி. வசந்தா, ஹொன்னப்ப பாகவதர், சாமா, காளி என். ரத்னம் முதலிய பெரிய புள்ளிகள் தோன்றுவதால் அமோகமான வெற்றியை எதிர்பார்ப்பதுசகஜம்.

★

சுந்தரிபாய், எம். கே. ராதா நடிக்கும் ஒரு சமூகப்படத்தை ஜெமினி தயாரிக்குமென்ற வதந்தி இன்னும் ஊர்ஜிதமாகவில்லை.

★

டைரக்டர் சி. வி. ராமன் சர்க்கார் சார்பாக எடுக்கவேண்டிய நான்கு துண்டுப் படங்களில் ஈடுபட்டிருக்கிறார். இது முடிந்த பிறகு ஆரவல்லி-சூரவல்லி என்ற தமது சொந்தப் படத்தில் கவனம் செலுத்துவாராம்.

★

"தேவ"னின் "கோமதியின் காதலன்" என்ற கதை 10-2-45 மயிலை ரசிகரஞ்சனி சபாவில் நாடகமாக நடித்தனர். இது விகடனில் தொடர்ச்சியாக வெளிவந்த கதை. இதை சீக்கிரமாக திரைப் படத்திற்குக் கொண்டு வந்துவிட வேண்டுமென்பதை வற்புறுத்தி "ஹிந்துஸ்தானி"ல் "சித்ரா" எழுதியிருக்கிறார்.

★

இவ்வளவு நாள் கழித்து இப்பொழுதுதான் "மஹா மாயா" சென்னையில் சுற்றுப்பிரயாணத்தை ஆரம்பித்திருக்கிறாளாம். 16—2—45 முதல் "பாரகன்" தியேட்டரில் அவளுக்கு அமோகமான வரவேற்பு கிடைத்திருக்கிறது.

★

திருச்சியில் மற்றொரு பிரசாரப் படமான "மானசம்ரக்ஷணம்" முருகனில் ஓடிக்கொண்டிருக்கிறது. இந்தப் படத்திலிருந்து தணிக்கை போர்டார் நீக்கியபகுதிகளை மீண்டும் சேர்த்துக்கொள்ள உத்திரவு கிடைத்துவிட்டதாம். வெலிங்டனில் ஹரிதாஸ் 18-வது வாரமாக ஓடிக்கொண்டிருக்கிறது "ராஜா"வில் கண்ணைமூடிக் கொண்டு ஓடிக்கொண்டிருக்கிறது "ஜகதலப் பிரதாபன்"—இது 45 வது வாரம், "கெயிடி"யில் "பூம்பாவை" தமிழ்ப்படம் திரையிடப்படுகிறது.

—:0:—

உங்களூரில் "சிவாஜி" கிடைக்கிறதா? இல்லாவிடில் உங்கள் பிரதிக்கு எழுதுங்கள்.



## அங்கஹீனம்

★

வெயிலொளியை மறைப்பதற்கு
வெள்ளிவிளிம் புடையதுவாய்
புயலொன்று வரக்கண்டு
பூந்தோட்டத் தொருபுறத்தே
மயிலொன்று திரைவிரித்து
மகிழ்ந்துநடம் செயக்கண்டும்
இயலறியான் சென்றானேல்
இவனன்றோ நிசக்குருடன்.

இச்சைக்குத் தகுந்ததொரு
யாப்பினிலே கவிபூட்டி
பச்சைக்கிளி யினமங்கோர்
பசுங்கிளையில் பண்ணோடு
கொச்சைமொழி குழறுவதை
மெச்சாது கோடியவன்போல்
அச்சச்சோ போவானேல்
அவனன்றோ நிசச்செவிடன்.

பொய்யில்லா உளச்சோபை
புஷ்பத்தின் புதுவழக
மையிட்ட மலர்க்கண்கள்
மானிவளைக் கண்டதுமே
வெய்யதொரு விலங்கென்று
வெறித்தவன்போல ஓடுபவன்
அய்யோ......! அவனன்றோ
அஞ்சாத கொலைகாரன்.

(சக்திசரணன்)




"ஷர்லிடெம்பிள்" விமானம்

பிரபல நடிகை ஷர்லிடெம்பிளுக்கு இப்போது 16-வயது ஆகிறது. அவள் பெயரால் விளங்கும், "வானரசன்" என்ற விமானத்திற்குப் பக்கத்தில் ஷர்லிடெம்பிள் நிற்கிறார். இது சென்ற ஜூலை மாதம் கட்டப்பட்ட போது, லண்டனிலிருந்து வாஷிங்டனுக்கு 18 மணி நேரத்தில் ஒரே மூச்சில் பறந்தது.

# ★ திருவிழா ★

—“ கைவண்ணன் ”—



நடுநிசி. மணி ஒன்று. அந்தக் கிராமத்திலே அந்தகாரம் சூழ்ந்துள்ளது. எங்கும் அமைதி, ஓரிரண்டு ஆந்தைகளின் அலறலைத்தவிர. ஆகாயத்தில் பூத்துள்ள நட்சத்திரங்களின் வெளிச்சம் எங்கும் பரவி நிற்கின்றன. ஒவ்வொரு வீட்டு வாசலின் எதிரிலேயும் அழகாக பெருக்கப்பட்டு. நீர் தெளிக்கப்பட்டுள்ள ரோட்டில் பெண்கள் தங்கள் முழுத் திறமையுடன் போட்டிருக்கின்றனர் கோலம். அந்த ஈர ரோட்டிலே பளிச்சென்று வெண்மையான மாவினால் போடப்பட்ட கோலங்கள், கருப்பு மனிதன் தன் வெண்மைப்பற்களை இளிச்சுக் காட்டுவது போலிருந்தது. தோரணங்களிலே தொங்கவிடப்பட்டுள்ள வர்ணக் காகிதக் கூண்டுகளிலிருந்து விதவிதமான ஒளிகள் வெளிவந்து மறைகின்றன. வரப்போகும் குதூகலத்தின் சின்னமாக விளங்கியது அந்த கிராமம்.

ஆந்தைகளின் அலறல்களுடன் சேர்ந்து கொண்டது வெகு தூரத்துக் கப்பாலிருந்து வரும் கூக்குரலும், தாரை, தம்பட்டத்தின் ‘டணக், டணக்’ சப்தமும். சப்தம் நெருங்கி வரவர இருளடைந்த வீடுகளிலிருந்து வெளிச்சம் வெளிப்படலாயிற்று. சப்தம் வெகு அருகில் வந்துவிட்டது. கிராமம் முழுவதுமே விழித்தெழுந்தது போல் வெளிச்சம். மாந்தர் அனைவரும் மங்களகரமாக விளக்கேற்றி ஆண்டவன் அர்ப்பணத்துக்காக, காய், கனிகளை வைத்துக் கொண்டு நிற்கின்றனர். புருஷர்கள் அனைவரும் தம் தம் வீட்டு வாசலில் பயபக்தியாக, பணிவுடன் நிற்கின்றனர். தூக்கங்கலையாத குழந்தைகள் ஆடி ஆடித் தலையை சாய்க்கின்றன. பெண்களில் சிலர் குழந்தைகளின் தூக்கத்தை தெளிவிப்பதில் மும்முரமாக ஈடுபட்டுள்ளனர்.

தாரை தம்பட்டங்களின் தாள சப்தங்கள் நின்றன ஓர் நிமிடம். அம்மன் அக்ரகாரத்துக்குள் நுழைந்து விட்டதற் கறிகுறியாக முழங்கியது மேள சப்தமும், நாதஸ்வரமும். அக்கிரகாரத்து அம்மாமிகளும், புருஷர்களும் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டு பரபரப்பாக இருந்தனர்.

அவ்வூரிலே பிடாரித் திருநாள். பிடாரி அம்மன் மூன்று நாட்கள் தீண்டப்படாதவர்களிடம் தான் தன் பூசையை ஏற்றுக்கொள்ளும், நான்காவது நாள் உற்சவமுடிவிற்கு அறிகுறியாக அம்மன் அந்த கிராமத்தின் ஒவ்வொரு தெருவிற்கும் சென்று ஒவ்வொரு வீட்டிலும் பூசை வாங்கும். அவ்வூர் ஜனங்கள் ஒருவராவது அம்மனிடம் பயப்படாதவரன்று. சுத்தமான மனதுடன் ஒவ்வொருவரும் தங்கள் குறைகளை சொல்லி கொண்டு கண்ணீர் விட்டழுவர். அவர் அவர் வீட்டு வாசலை அம்மன் அடைந்ததும், அவர் அவர் மனதில் சொல்லத்திறமற்ற குதூகலம் ஏற்படும். தங்கள் குறைகள் தீர்ந்து விட்டதாக அவர்கள் எண்ணுவர்.

அம்மன் அக்கிரகாரத்தை தாண்டி அடுத்த தெருவிற்குப் போகும் போது மணி ஆறு.

காலை இளம்வெயில். அம்மே! என்ற குரல் தான் அம்மனை அழைக்கின்றது. அந்த தெருவிற்கு முதல குரலைக் கேட்கும் போதே அம்மன் முகத்திலிருந்த புன் சிரிப்பும் மறைந்து கசப்புத் தன்மை வெளிப்படுவது நன்கு தெரிகிறது. ஒவ்வொரு வீட்டின் வாசலிலும் குட்டியும் தாயுமாக ஆடுகள் நிற்கின்றன. அவைகள் தங்களுக்கு வரப்போகும் ஆபத்தை தெரிந்து தானோ என்னவோ “அம்மே! அம்மே!” என்று அலறுகின்றன. “அம்மையே! நீ தானே எங்களை அனுப்பிவித்தாய். உன்பெயரைச் சொல்லியே இம்மூட மனிதர்கள் எங்களை பலியிடப் போகிறார்களே! இந்தத் தெருவிலுள்ள எங்கள் வம்சத்தைப் பார். இப்படி ஒரு நாளிலே அழித்தால் எங்கள் வம்ச விருத்தி எப்படிப் பெருகும்? நாங்கள் இவ்வளவு பேர் முறையிடுவது உனக்குகேட்கவில்லையா? “அம்மே! அம்மே!! அம்மே!!!” என்று கூறுவது போலத்தானிருக்கிறது. தாரைகள் நெருங்க நெருங்க தாயும் தனயனும் ஒன்றை ஒன்று இறுகப் பிடித்துக் கொள்கின்றன. தனயன் தாயின் மடிக்குள் மறைந்து கொள்கிறது. ஒவ்வொரு ஜீவனிடமிருந்தும் வரும் கண்ணீரை ஏன் இந்த மூட ஆத்மாக்கள் கவனிக்கப் போகிறார்கள்? அம்மன், கருணையற்ற அம்மன், இத் தெருவிலே வந்தாயிற்று. நீண்ட தாரை குழல்களை ஊதுவது ஆடுகளுக்கு எமனின கட்டளையை வாசிப்பது போலிருக்கிறது. எமனின் தூதர்கள் தங்கள் அறுவாள் ஏந்திய கையைத் தூக்கிக் கொண்டு நிற்கின்றனர். எமகிங்கரர்களுக்கு மாலை போட்டு, பூ சூட்டி, சந்தனம் கொடுத்து வரவேற்கிறார் வீட்டுக்காரர், மேய்த்துக் கொண்டிருந்த ஆட்டை விலைக்கு வாங்கி அம்மனுக்குபலியிடும் அண்ணல், ஆட்டை கொண்டுவந்து நிறுத்துகிறார் அம்மனின் முன்பு கடவுளின் சிப்பந்திகளாக நினைத்துக் கொண்டுள்ளவர்கள். ஒவ்வொருவராக ஆட்டைப் பற்றி வர்ணிக்கின்றனர். ஒருவன் “ஏன் அண்ணே! ஒரு கால் சற்று மட்டமோ? சாய்ச்சு நடக்குதே.” “ஏய்! குற்றம் சொல்லாதேடா! ஆறுமுக மாமுண்டியா பிள்ளை அஞ்சு நாளா, இந்த வளியே அலைஞ்சு அம்பது ரூபா கொடுத்தல்ல திருவிளாக்கு ஆடுபிடிச்சாறு. அப்பனுக்கு இருக்குமா?” இது இன்னொருவன் கூற்று.

அங்கக் குறைவு, ஹீனமுள்ள ஆட்டை அம்மனுக்குப் பலியிடக் கூடாதாம். அமர்ந்து, நிமிர்ந்து நடக்கும் ஆடுதான் அம்மனுக்கு விசேஷமாம்!

ஆடு கடைசிமுறையாக அம்பிகையை அழைத்து, அலுத்து நின்றது. அம்மனின் உத்திரவைப்பெறுவதற்காக மஞ்சள் தண்ணீரை காலை வேளையில், முகம் முதல் வால் வரை விடுகிறார்கள். மேலேபட்ட தண்ணீரை உதறிவிட, ஆடு சிலுப்புகிறது அவ்வளவு தான். ஆனந்தம் அந்த யமகிங்கரனுக்கு! அம்மன் உத்திரவாயிற்றாம்! எதற்கு? பலிக்குதான்! ஒருவன் தலையைப் பிடிக்க மற்றவன் காலை சேர்த்துப் பிடித்து விட்டான். கையைத் தூக்கியாகி விட்டது. யமகிங்கரன் “அண்ணே! ஒரேவெட்டு! தடங்கல் கூடாது அண்ணே! பத்திரம்!!.

அந்தப் பஞ்சுபோன்ற கழுத்தை முத்தமிடுவதற்கு எப்பேற்பட்ட அறுவாள்.

‘சதக்’. அம்மன் ஒரு குலுக்கு குலுங்குகிறாள். தலைவேறு உடல் வேறு. ரத்த ஆறு தெருவிலே பள்ளத்தை நோக்கி ஓடுகிறது. தன் மேல் தெளித்த தனயனது இரத்ததை மோர்ந்து பார்க்கிறது தாய் ஆடு. “அம்மே! அம்மே!!”

ஆனால் அடுத்த நிமிடம் அதன் கதி என்ன?

தெருவெல்லாம் உடல்களும், திண்ணையெல்லாம் தலைகளுமாக அஹிம்சையின் அம்சங்களான ஆடுகள் பிரிக்கப்பட்டுள்ளன. நைவேதனம் ஆயிற்று. அம்மனை அடுத்த வீட்டை நோக்கி நகர்த்தியாயிற்று. ஒவ்வொரு வீட்டிலும் ‘சதக்’ என்ற சப்தம் தொடர்கிறது.

ஆனால் ஒவ்வொரு வெட்டின் போதும் ஒவ்வொருதடவை அம்மன் குலுங்குகிறாளே! அதை ஏன் இவர்கள் கவனிப்பதில்லை. அதுவே இவர்கள் மூட பக்தியை அம்மன் ஏற்றுகொள்ளவில்லை என்பதற்கறிகுறியாகாதா? அதை ஏன் அவர்கள் எண்ணுகிறார்கள்?

மணி பத்து. அவர் அவர்கள் தங்கள் தங்கள் வேலையை பார்க்கின்றனர். ஆனால் நடுத்தெருவிலே கிடக்கும் அந்த உடல்களைப்பற்றி யார் சிந்திக்கிறார்கள்?

அதோ! வந்துவிட்டார். கம்பளி கண்ட்ராக்டர் கருப்பண்ண நாடார். அந்த உடலை எடுத்து செல்கின்றனர் தோல் உரிக்க, பத்து ரூபாய் பணம் ஏறுகிறது, கொடை அண்ணல், ஆறுமுக மாமுண்டிடம்!

## கள்ளக் கண்ணன்

(வித்துவான் வி. துரைசாமி)



1 வெள்ளி முளைத்தெழும் வேளையிலே—குளிர்
வெண்மதி மங்கிடும் காலையிலே
புள்ளினம் கூவிய போதினிலே—மலர்ப்
போதவிழும் தெய்வக் காவினிலே

2 கண்ணனை எண்ணிக் கசிந்துருகி—இந்தக்
காவில் குடத்துடன் தாவிவந்தேன்
தண்ணெனும் நீரும்என் புண்ணினை ஆற்றத்
தயங்கிய போது மசக்கலிலே

3 பேதையேன் வாதனை மிக்குப் பெருகிய
சூதினைக் கண்டோரு சூழ்ச்சி செய்தே
போதை மிகுந்திடப் போன் குரலால்—எந்தப்
போதும் உயிர்க் குழல் ஊதுகின்றான்

4 காதலை நெஞ்சிற் சுமத்திவிட்டான்! —இடை
மீதிற் குடத்தைச் சுமக்கவொட்டான்!
மாதவன் அன்றியிம் மேதினியில் —ஒரு
மானிட வாழ்வினி யேனெனக்கே!

# சத்தியவதி

★

"ஹர்ஷன்"

பக்கத்து வீட்டுக் கிழவரின் மருமகப் பிள்ளைக்கு எங்கள் ஊருக்கே மாற்றலாகியிருந்தது. புருஷனும், மனைவியுமாக மூட்டை முடிச்சுக்களுடன் வந்து இறங்கிய அவர்களைப் பார்த்தபோது எனக்கு கோபம் கோபமாக வந்தது. கிழவரின் மகள் சத்தியவதி. இருபது பிராயம் கூட நிரம்பப்பெருத யுவதி. எனக்கு இரண்டொரு வயது மூத்தவளாக இருக்கலாம். ஆனல் அந்த மனிதரோ, கிழவரின் தம்பிதானே என்று சொல்லும்படியான அவ்வளவு வயதான தோற்றமளித்தார். எவ்வளவு பொருத்தமற்ற தாம்பத்ய ஜோடிகள்.

எங்கள் வீட்டிலே, ஒருநாள் அவர்களுக்கு விருந்து பண்ணினள் என் தாயார். அன்று சாப்பாடானதும் எல்லோரும், ஹாலிலே உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்.

நடுவில், சத்தியவதி என் தாயாரைப் பார்த்து, "ஏன் அக்கா! உங்கள் பிள்ளை கிருஷ்ணன் பெரிய சாதுவாக இருக்கும் போலிருக்கே" என்று என்னைக்குறித்து புன்னகை புரிந்தவண்ணம் கேட்டாள்.

அந்த மனிதரும் என்னைப் பார்த்தபடியே "இந்த வயதிலேயே கிருஷ்ணனின் உள்ளம் வேதாந்தபரமான எண்ணங்களிலே லயித்துக் கிடக்கிறது. ஒழிந்த வேளைகளில் அடிக்கடி இங்கே வந்து விடுகிறேன் கிருஷ்ணு! இரண்டு பேருமாக சர்ச்சை செய்து பொழுது போக்கலாம்" என்று சொல்லிவிட்டுப் போனர்.

ஆனல், அவருக்குப்பதிலாக சத்தியவதி தான் அடிக்கடி எங்கள் வீட்டிற்கு வந்து போய்க்கொண்டிருந்தாள். அம்மாவை அவள் அக்காள் என்று அழைத்ததால் நான் அவளை "பின்னி" என்று ஆந்திரர்கள் வழக்கப்படி முறைவைத்துக்கொண்டேன். நாங்கள் இருவரும், மணிக்கணக்காக, மகுடியில் மயங்கிய சர்ப்பம் போல, ஒருவர் பேச்சில் ஒருவர் திளைத்து பொழுதைக் கழிப்போம். பத்திரிகையில் வெளிவரும் கதைகள், கட்டுரைகள் அவற்றை எழுதுவோரின் புனைப்பெயர்கள் அவள் இருந்த ஊர்களின் வர்ணனைகள், சரித்திர பிரதான்யம் பெற்ற கலா விநோதங்கள் இத்யாதி இத்யாதி விஷயங்கள் எங்கள் பேச்சிலே நிறைந்திருக்கும்.

என் அறையில் கல்லூரிப் புத்தகங்களைத்தவிர, இரண்டு அலமாரிகள் நிறைய கதைப் புத்தகங்கள் இருந்தன. என்னை எழுத்துப் பைத்தியமாக உருவாக்கியது இந்தக் கதைப் புத்தகங்களே என்பது அம்மாவின் அபிப்பிராயம். சத்தியவதி இந்தப் புத்தகங்களை ஒவ்வொன்ருக எடுத்துப்போய் வாசித்துவர ஆரம்பித்தாள்.

இப்படியாக ஆரம்பித்து வளர்ந்தது எங்கள் பாந்தவ்யம். நான், "பின்னி பின்னி" என்று அழைக்கும் போதெல்லாம் அவளது தாய்மை யுள்ளம் விசாலித்துப் பூரித்ததா என்பது எனக்கு புரியாத புதிராகத்தான் இருந்தது, ஆனல் அவள் என்னை "கிருஷ்ணு" என்று அழைக்கும் இதயவேகம் ஈன்றெடுத்தவளின் வாத்சல்யபாவத்திற்கு ஈடாகத்தான் இருந்தது.

அவளுக்கு இந்தியப் பெண்மையின் மேம்பாட்டை விஸ்தரிப்பதில் அலாதி கர்வம். அதனுல்தானே என்னவோ வயது முதிர்ந்த கணவனிடம் தன் இளம் வாழ்க்கையை பூரணத்தூய்மையுடன் அர்ப்பணித்திருந்தாள். அவளைக்கண்டபோதெல்லாம் வேத கால மைத்ரேயியும் ஜனககுமாரி ஊர்மிளாவும் என் நினைவிற்கு வந்தனர்.

* * *

தான் படித்து முடித்துவிட்ட, புத்தகத்தை எடுத்துக்கொண்டு என் அறைப் பக்கம் வந்தாள். கையிலே காகிதக் கொத்து வேறு வைத்திருந்தாள். மேஜையின் பக்கம் நெருங்கி, சிரித்த வண்ணம், "கிருஷ்ணு! இந்தக் காகிதங்கள் புத்தகத்தினுள்ளே இருந்தன. நம் கிருஷ்ணன் ஏதோ ஒரு ராதையை வர்ணித்து எழுதிய வசன கவிதை மாதிரி இருந்தது. தவறுதலாகப் படித்து விட்டதற்கு மன்னித்து விடுவாயல்லவா" என்று கேட்டுவிட்டு கலகலவென்று எதிரொலி கிளம்ப நகைத்தாள்.

நான் திடுக்கிட்டுவிட்டேன். வெட்கிப் போனவனுய் தலைகுனிந்த வண்ணம், "இல்லை பின்னி! பத்திரிகைக்கு அனுப்பிய கவிதையின் நகலை அதன் உள்ளே வைத்திருந்தேன் போலிருக்கு" என்றேன்.

"அடேயப்பா! என், வாழ்க்கையிலே வரப்போகும் எதிர்கால ரமணியைப் பற்றிய உன் இன்பக்கனவு என்றுதான் சொல்லேன். அதில் தவறு என்ன! இப்படிப்பட்ட வர்ணனைக்கிடான என் மருமாள் எங்கே ஒளிந்து கொண்டிருக்கிருளோ யார்கண்டது" என்று கேலி பண்ணிக்கொண்டே போனுள்.

மற்ரெருநாள் ஏதோ பாட்டை முணகியபடியே ஊஞ்சலில் படுத்துக்கொண்டிருந்தேன். சத்தியவதி வந்ததை கவனிக்க வில்லை. அவள் என் அருகில் வந்ததும், "கிருஷ்ணு! பாட்டை உரக்கத்தான் பாடேன். நானும் கேட்டு ரசிக்கிறேன்" என்ருள்.

நான் எழுந்து உட்கார்ந்துகொண்டு, "ஊஹூம் பின்னி! நீங்கள்தான் பாடணும்" என்று குழந்தை மாதிரி முரண்டு பண்ணினேன்.

ஏதோ தமிழ்ப்பதம் ஒன்றை நீலாம்புரியில் பாடிக்காட்டிக்கொண்டிருந்தாள். அந்தப்பக்கமாக வந்த என் தாயார் "என்ன சத்தியவதி! குழந்தைக்குத் தாலாட்டுகிருயா என்ன" என்று கேட்டு விட்டுச் சிரித்தாள்.

"ஆமாம் அக்கா! பாட்டு இல்லாமல் தூக்கம் வரவில்லையாம் கிருஷ்ணனுக்கு" என்று கூறி நகைத்துக்கொண்டே போனுள்.

* * *

இந்த சம்பவங்களெல்லாம் நிகழ்ந்து ஒன்றரை வருஷ காலம் உருண்டோடிப் போயிற்று. ஒருநாள் சாயந்திரம் காலேஜிலிருந்து வீட்டிற்கு வந்தேன். அம்மா கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். என்னைக் கண்டதும் "கிருஷ்ணு! காலையில் சத்தியாவை ஆஸ்பிடலுக்கு காரிலே அழைத்துக் கொண்டு போனர்கள். அங்கே குறை மாதப் பிரசவமாகி பெண்குழந்தை பிறந்திருக்கிறதாம். அவள் ஆத்துக்காரரும், அப்பாவும் அங்கேயே இருக்கிருர்கள்" என்ருள்.

"இப்போது சுகமாக இருக்கிறதல்லவா", என்று கேட்டேன். "என்ன இருந்தாலும் குறை மாதப்பிரசவம் தானே அப்பா!" என்ருள் என் தாய்.

மூன்று நாட்கள் கழித்து ஆஸ்பிடலுக்குப் போயிருந்தேன். என் பின்னியைப் போட்டிருந்த அறையினுள் நுழைந்து கட்டிலருகே போனேன். அவள் என்னைக் கண்டதும், நர்சைக் கூப்பிட்டு, தூரத்தில் தொட்டிலில் கிடந்த குழந்தையை வெளியே எடுத்துப்போய்விடும்படி சொன்னுள்.

"ஏன்; பின்னி! நான் என் தங்கையைப் பார்க்கக்கூடாதா என்ன" என்று கேட்டேன்.

அவள் மெலிந்த குரலில் "வேண்டாம் கிருஷ்ணு! அது அந்தக்கிழவரின் குழந்தை" என்ருள். பாவம், அவளுக்கு ஏனே இந்த ஏக்கம், மனமாற்றம் என்று எண்ணினேன்-

"என்ன சொன்னீர்கள் பின்னி!", என்றேன்.

"இல்லை கிருஷ்ணு! அது உயிரோடிருக்கப்போகும் குழந்தை அல்ல. அதனுல்தான் வேண்டாமென்கிறேன்" என்ருள்.

இயற்கைக்கு மாறுபட்ட அவள்வாழ்க்கையின் பலனுன இந்தப் பிரசவவேதனை அவளது மனோ வேதனையைத்தான் தூண்டிவிட்டிருந்தது.

* * * *

ஒன்றரை மாதத்திற்குப்பிறகு, ஆஸ்பிடலிலிருந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். ஆமாம் அவள் சொன்னமாதிரி குழந்தையை இழந்து விட்டுத்தான் வந்திருந்தாள்.

"அக்கா!" என்று அழைத்தபடியே எங்கள் வீட்டினுள் வந்தாள். மிகவும் மெலிந்து துர்ப்பலமான நிலையிலிருந்தாள். அவளுக்கு ஆறுதலாகப்படும்படி அம்மா ஏதேதோ கூறிவிட்டு "போனல் போகிறது சத்தியா, வருத்தப்படாதே இனி குழந்தை பிறக்காமலா போய்விடப் போகிறது. கொடுத்து வைத்தது அவ்வளவுதான்" என்ருள்.

(12-ம்பக்கம் பார்க்க)

# இசை விருந்து

"நாலி"

செம்மங்குடி சீனிவாசய்யர் பாடித் திறந்து வைத்த கோவை ஸ்ரீ கிருஷ்ண கான சபையின் சார்பில், ராவ்பகதூர் மாரண்ணக்கவுண்டர் பெண் பாடசாலையில் சென்ற 18—2—45 ஞாயிற்றுக் கிழமை யன்று ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளின் இன்னிசை விருந்து நடைபெற்றது. ஸ்ரீமதி பட்டம்மாள் கொஞ்ச காலம் சங்கீத ரேடியோ உலகங்களை விட்டு அந்தர்த்தானமாகியிருந்து சமீபத்தில் வெளிக்கிளம்பியவர். வெகு நாட்களாகக் கேட்காமல் இருந்த அவர் பாட்டைக் கேட்க செவியைத் தீட்டி வைத்துக் கொண்டிருந்தனர். அன்று 'வனஜாக்ஷி' என்ற வர்ணத்துடன் கச்சேரியை ஆரம்பித்து வைத்தார் ஸ்ரீமதி பட்டம்மாள்.

நல்ல சுத்தமான வெண்கல மணி போல் கணீரென்று ஒலிக்கக் கூடியது பட்டம்மாளின் குரல். அதில் கம்பீரமும், இனிமையும் இழைந்திருக்கும்; மேல் ஸ்தாயியிலும் கூட அனாயாசமாக, தங்குதடையின்றி சஞ்சரிக்கும். ஆனல் இந்தக் கச்சேரியில் அவர் குரலில் ஏனோ அந்தக் கம்பீரத்தையும், அழுத்தத்தையும் அவ்வளவாகக் காண முடியவில்லை. ஒரு வேளை வெகு நாட்களுக்கப்புறம் கேட்டதால் அப்படித் தோன்றுகிறதோ என்னவோ?

ஆரம்பத்தில் பாடிய இரண்டொரு தெலுங்கு பாடலுக்குப் பிறகு, சங்கராபரணத்தை கச்சிதமாய் ஆலாபனை செய்து "தூக்கிய திருவடி" எடுத்தது முதல் இந்த ஏமாற்றம் ஓரளவு குறைந்து வர ஆரம்பித்தது. 'எத்தனையோ பிறவிஎடுத்தெடுத்தே யிளைத்தேன்', என்றஇடத்தில் நின்று, அவர் அருமையாக நிரவல் செய்த போது, இதோ சங்கராபரணம்; பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று சொல்லுவது போலிருந்தது. 'தூக்கிய திருவடி'க்கு பிறகு இரண்டு தெலுங்கு கீர்த்தனைகள். அதை யடுத்து தோடி ராக ஆலாபனமும், 'காணக்கண்கோடி வேண்டும்' கீர்த்தனமும் பாடினர்.

இந்தக் 'காணக் கண்கோடி' கீர்த்தனத்தை பலமுறை பட்டம்மாள் பாடக் கேட்டிருக்கிறேன்; திருப்பித் திருப்பிக் கேட்க வசதியாயிருக்கும்படி இசைத் தட்டிலும் இப்பாட்டு பதிவாயிருக்கிறது. இருந்தாலும் கூட பட்டம்மாள் அதைப் பாடும் போது, புதிதாய்க் கேட்பது போல் அனுபவித்து ஆனந்திக்க முடிகிறது. இதற்கு ஒரு முக்கிய காரணம், மற்றவர்களைப் போல் சமயம் கிடைத்த போதெல்லாம் வார்த்தைகளை மென்று விழுங்காமல் கேட்போருக்கு அர்த்தம் புரியும்படி பட்டம்மாள் வார்த்தைகளைத் தெளிவாய் உச்சரித்துப் பாடுவதே.

அடுத்தபடியாக 'சித்தம் எப்படியோ' என்று நாதநாமக் கிரியையில் பாடியது உருக்கமாயிருந்தது. பிறகு பாடிய பாட்டுக்களில் "காலைத்தூக்கி நின்றாடும் தெய்வமே" என்ற யதுகுலகாம்போதி கீர்த்தனமும், வாசஸ்பதியில் பாடிய "பராத்பரா"வும் குறிப்பிடத்தக்கவை.

'பல்லவி பாடவில்லையே?' என்று என் பக்கத்திலிருந்தவர் நிமிஷத்திற்கு நிமிஷம் என்பிராணனை வாங்கிக்கொண்டிருந்தார். நல்ல வேளையாக ஸ்ரீமதி பட்டம்மாள் தோடி ராகத்தை விஸ்தாரமாக ஆலாபனை செய்து 'தென்பழனி வடிவேலனே குகனே அறுமுகனே' என்ற பல்லவியை எடுத்துக் கொண்டு பிரமாதமாகப் பாடி கொஞ்ச நேரம் ஸ்வர யுத்தமும் மாதிரி காட்டின பிறகு தான் அந்த நண்பரின் இடைவிடா தாக்குதலிலிருந்து நான் விடுதலையடைய முடிந்தது.

பல்லவிக்குப் பிறகு துக்கடா வரிசையில் 'என்று தணியுமிந்த 'தாண்டிற் புழு' வினைப் போல்,' 'சிவ கங்கா' (புகழ் பெற்ற) 'வள்ளிகணவன் பேரை' முதலியவைகளைப் பாடி பரவசப் படுத்தினர். பிறகு பாடிய 'கண்டதுண்டோ கலியுகத்தில் காணவேண்டாமோ' என்ற கஸ்தூரிபாஞபகார்த்தப்பாட்டு இதயத்தில் இன்பம் நிரப்பி இருகையும் தட்ட வைத்தது. இந்த ஆனந்தத்தில் ஹாலில் மாட்டியிருந்த கடியாரம் எட்டரை அடிக்க வேண்டியதற்கு ஒன்பதாய் மணியை அடித்துத் தள்ளியது கூட வியப்பாய்த் தோன்றவில்லை. ஆனல் ஹம்சத்வனியில் 'நிரவதிசுக'என்றதிருப்புகழை பாட ஆரம்பித்ததும் சிலர் அதை மங்களம் என்று நினைத்துக் கொண்டு எழுந்து விட்டதும் அதன் எதிரொலி போல் பட்டம்மாள் மங்களம் பாடிக் கச்சேரிக்கு முற்றுப்புள்ளி வைத்ததும் வியப்பாகத் தோன்றவிட்டாலும் அது ஒரு தமாஷாகத் தான் இருந்தது.

பாடகியுடன் ஒத்துழைத்து, கச்சேரியை சோபிக்கச் செய்த மிருதங்கத்தையும் (கல்பாத்தி ராமனுதன்) பிடிலையும், (திருவள்ளூர் சுப்ரமண்யம்) பாராட்ட வேண்டும்.

அன்பர் திரு. எஸ். எல். சேஷாத்ரியின் சேவையால் கோவை மக்களுக்கு மேலும் மேலும் இசை விருந்தளிப்பதில் கிருஷ்ணகான சபா சிறந்து விளங்குமென்று எதிர்பார்க்கலாம்.



**சிவாஜி சந்தா விபரம்.**

| | | |
|---|---|---|
| **திருச்சி நகரம் :** | | |
| வருஷம் 1-க்கு | ரூ. | 6—0—0 |
| 6 மாதம் | ,, | 3—4—0 |
| **வெளியூர் இலங்கை தபால் மூலம் :** | | |
| வருஷம் 1-க்கு | ரூ. | 7—0—0 |
| 6 மாதம் | ,, | 3—8—0 |
| **ஸ்தலஸ்தாபனங்கள் சர்க்கார் முதலியவைகளுக்கு :** | | |
| வருஷம் 1-க்கு | ரூ. | 10—0—0 |
| 6 மாதம் | ,, | 5—0—0 |

(11-ம் பக்கத் தொடர்ச்சி.)

## சத்தியவதி

அவள் விரக்தி மனோபாவத்துடன் சிரித்தாள். கிழவருடன் வாழ்க்கை நடத்தியதன் சின்னம் ஒழிந்துவிட்டதில் அவளுக்குக் கவலையே இல்லை போல் தோன்றியது.

அவள் அம்மாவைப்பார்த்து, "என் அக்கா! எனக்குத்தான் குழந்தை கிருஷ்ணன் இருக்கானே! குழந்தையில்லை யென்று யார் சொன்னது. இனி வேறு குழந்தைதான் எதற்கு" என்றாள்.

இதைக் கேட்டதும் அறையினுள்ளிருந்து வெளியே வந்தேன் "பின்னி! நாம் இருவரும் ஒத்த வயதினர்களாய் இருந்து விட்டால் தான் என்ன! வயது உன் உள்ளத்தில் எழும் தாய்மையையும் தாய்மை யுணர்ச்சியையும் மாற்றி விடுமா என்ன? உண்மையில் நீ என் அன்னை தான் பின்னி!" என்று கூறி அவளை நமஸ்கரிக்கலானேன்.

அவள் குனிந்து நமஸ்கரிப்பதினின்று என்னைத் தடை செய்தாள். அவள் நிமிர்ந்தபோது அவளது விழிகள்கண்ணீரிலே மிதந்துகொண்டிருக்கக் கண்டேன்.

## மணி மொழிகள்

இவ்வுலகில் எவர்க்கும் நான் அஞ்சேன். ஆண்டவன் ஒருவனுக்கே யான் அஞ்சி நடப்பேன்; எவரிடத்தும் பகை கொள்ளேன்; எவரது அநியாயத்துக்கும் இணங்கேன்; அசத்தியத்தைச் சத்தியத்தால் வெல்வேன்; அசத்தியத்துடன் போராட எவ்விதமான துன்பங்களையும் ஏற்பேன்.

—காந்திஜி.

ஒருவன் அல்லும், பகலும், தான் துக்கத்தி லாழ்ந்திருப்பவன், தாழ்ந்தவன், சக்தியற்றவன் என்றெல்லாம் எண்ணுவானுகில் சக்தியற்றவனுகவே ஆகிவிடுகின்றான். நான் சகல சக்தியையும் பெற்றவன், எதையும் செய்யக்கூடிய திறமையை உடையவன் என்று எண்ணுவானுனல் அப்படியே எதையும் செய்யக் கூடிய திறமையைப் பெறுவான். நீங்கள் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்திருக்கவேண்டிய பெரிய உண்மை இது. நாம் அனைவரும் சர்வ சக்தி வாய்ந்த மகாசக்தியின் குழந்தைகள். நாம் எல்லோரும் எல்லையில்லாச் சோதியினின்றும் தோன்றியுள்ள சுடர்கள். நாம் எப்படிச் சக்தியற்றவர்களாக முடியும்?

—விவேகானந்தர்.

பிரபஞ்சம் பேராசைக்காரனுக்கும், அயோக்யனுக்கும், தீயவனுக்கும் அனுகூலம் செய்வதுபோல வெளிப் பார்வைக்குத் தோற்றமளித்த போதிலும், உண்மையில் அனுகூலம் செய்வதில்லை; அது யோக்கியனுக்கும், பெருந்தகையாளனுக்கும், நல்லவனுக்குமே உதவி செய்கிறது.

—ஜேம்ஸ் ஆலன்.

மஹாபாரதத்திலிருந்து ஒரு காட்சி :

# சுவேதகேது

எம். வி. வெங்கட்ராம்



**பாத்திரங்கள்:**

**சுவேதகேது:**

**நசிகேதர்:** சுவேதகேதுவின் தந்தை.

**பிரஜாவதி:** நசிகேதரின் அன்னை. மனைவி.

**ஓர் அதிதி:** யாரோ ஒரு பிராமணர்.

**காலம்:** எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னர், 'உதிரி மனிதன்'—'சமூக மனிதனு'வதற்காக முயன்று கொண்டிருந்தபோது.

**இடம்:** பாரத பூமியில், ஏதோ ஓரிடத்தில் அமைக்கப்பெற்றிருந்த ஆசிரமம் ஒன்றில்.

**ஜோடனை:** மத்தியான்ன வேளை; நசிகேதருடைய குடிலின் வெளிப்புறத்திலுள்ள, ஒரு மரத்தின் நிழலில் அமர்ந்தவண்ணம், நசிகேதரும் அதிதியும் அளவளாவிக்கொண்டிருக்கின்றனர்.

பிரஜாவதி, குடிலின் வாயிலுக்குப் பின்னல் சாய்ந்தவாறு, பதியும் அதிதியும் உரையாடுவதைக் கேட்டுக்கொண்டிருக்கிறாள்.

சுவேதகேது அங்கு இல்லை.

**நசிகேதர் :** ஸ்வாமி, அதிதி சத்காரத்தில் குறை எதுவும் ஏற்படவில்லை என்று நம்புகிறேன்.

**அதிதி :** குறை இல்லை; திருப்தியுற்றேன்.

**ந :** ஸந்தோஷம்.

**அ :** ஆனல், விருந்துண்டபின் சஞ்சலம் ஒன்று மனதில் புகுந்து விட்டது; அதைத் தவிர்ப்பதற்கு உன்னல் ஆகுமா என்று தான்......

**ந :** என்னல் தவிர்க்கக்கூடியதாயின் என்னலானதைச் செய்வேன்; அதிதியின் உள்ள நிறைவு தானே, எனக்கும் இன்பம் அளிக்கும்.

**அ :** அவ்வாருனல் என் மனேபீஷ்டத்தை பூர்த்தி செய்வாயா ?

**ந :** அது என் தர்மம்.

**அ :** தயங்கமாட்டாயே?

**ந :** மாட்டேன்.

**அ :** எனக்குப் புத்திரபாக்கியம்இல்லை; எனக்கு வேண்டும்!

**ந :** அதற்காக நான் என்ன செய்ய வேண்டும்?

**அ :** நசிகேத, நீ மாணம் அடைந்த பிறகு உனக்கு பிண்டம் வைப்பதற்கும், உனது ஆத்ம சாந்தி பெறுவதற்காக சிரார்த்தம் செய்வதற்கும், ஒரு புத்திரன் இருக்கிறன்; காளைப் பருவத்தினனுகிய சுவேதகேது தந்தைக்கு உறு துணையாக இருக்க வல்லவன்......

**ந :** உங்களைப் போன்ற பெரியோர்களின் ஆசி தானே?

**அ :** என் துர்பாக்கியம், எனக்கு அத்தகைய மைந்தன் இல்லை......

**ந :** ஆண்டவன் அருள்புரிவார்!

**அ :** எனக்கு மணமே ஆகவில்லை; ஆண்டவர் எப்படி அருள்புரியமுடியும் ? ...அதற்காகத் தான் உன் உதவியைக் கோருகிறேன். மகவுபெறும் வாய்ப்பு உள்ள ஸ்திரீ ஒருவள் எனக்கு மனைவியாக இருந்து, குழந்தை ஈன்று தர வேண்டும்.

**ந :** அதற்காக... நான்... ?

**அ :** அதற்காக நான்... உன் மனைவி மீது மையலுற்றேன்!

**ந :** (திடுக்கிட்டு எழுந்து) ஸ்வாமி?

**அ :** அவள் என் மனைவியாக வேண்டும்?

**ந :** நிஜமாகவா சொல்லுகிறீர்கள்?

**அ :** விளையாட்டிற்காகவும் நான் பொய் பேசியதில்லை......

**ந :** ஸ்வாமி, இருபது வருஷங்களாக நான் அவளுடன் வாழ்க்கை நடத்துகிறேன்; அவளைப் பிரிவதென்ருல்......

**அ :** மனம் வராது-தான்! ஆதித்தியத்தில் பிசகுவது என்ருல் மாத்திரம்?

**ந :** இல்லம் நாடி வந்த விருந்தாளியின் மனம் கோணுதவாறு உபசரிக்க வேண்டுவது தர்மம். அதிதி தேவ சமானர். ஆயினும் என்னை மிகவும் சங்கடமான நிலையில் வைத்து விட்டீர்கள்......

**அ :** நீ தயங்குவாய் என அறிவேன். கேவலம் ஒரு பெண் ஜன்மம். பாப ஜன்மத்திற்காக அதிதி தர்மத்தை நெகிழ விடுவாயா; நசிகேத்?

**ந :** பெண் பாப ஜன்மந்தான். ஆனல்... எனது ஸுக துக்கங்கள் அவளுடன் இணைந்து விட்டன. என்னுடைய வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் அவள் வியாபித்திருக்கிறள். அவள் துணையில்லாமல் ஒரு நாள் கூட என்னல் தனியாகக் கடத்த முடியாது. என்னிடமிருந்து அவளைப் பிரிக்க முயற்சிக்காதீர்கள்!

**அ :** பெண்ணை, ஆடவன் மணப்பது எதற்காக?

**ந :** பிரஜோத்பத்திக்காக......

**அ :** உன்னைப் பொறுத்த மட்டில், அந்த லக்ஷ்யம் பூர்த்தி ஆயிற்று, இல்லையா?

**ந :** ஆகிவிட்டது...

**அ :** பின்னும் ஏன் அவளை சுமக்க விரும்புகிருய்? எனக்கோ குழந்தைகள் இல்லை; வேண்டும்; அதற்காக...

**ந :** நான் வேறு ஒரு பெண் தேடி உங்களுக்கு......

**அ :** அதற்கு உன் உதவி எனக்குத் தேவையில்லை; நானே செய்து கொள்ள முடியும். பிரஜாவதியைப் பார்த்தேன். அவளுடைய லக்ஷணம் என்னை வசீகரித்தது. இருபதாண்டு மைந்தன் ஒருவன் இருப்பினும் ஸுகுமாரியாகவே தோற்றம் அளித்தாள். வலிவும் உறுதியும் வாய்ந்த வம்சம் அளிக்கும் பேறு பெற்ற அவள் மூலம் என் குறையைப் போக்கிக் கொள்ள விரும்புகிறேன். என் மனம் அவளிடம் சென்று விட்டது...

**ந :** அவளைவிட லக்ஷணமான, அவளைவிடத் தேக உறுதி உடைய...

**அ :** ஸ்திரீ எனக்குத் தேவை இல்லை. (கடுமையான குரலில்) நசிகேத! என் இச்சைப்படி செய்யப் போகிருயா, இல்லையா? சொல்லு! இல்லை எனில் இப்போதே நான் போகத் தயார்! அதிதியை அவமதிக்கத் துணிந்தவனின் வீட்டில் விருந்து ஏற்றதே பாபம்!

**ந :** (விநயமாக) அதிதி சேவை—கிருஹ தர்மம்; பங்கமுற்ற விருப்புடன் நீங்கள் திரும்பினல், நான் மகாபாதகம் செய்தவன்ஆவேன்; என்னை அதற்கு உடந்தை ஆக்காதீர்கள்--ஸ்வாமி என்னை க்ஷமியுங்கள். மீண்டும் ஒரு முறை என்னுடைய ஸ்திதியை ஆராய்ந்து கூறுங்கள்...

**அ :** தீர்க்கமாக யோசனை செய்தே கூறுகிறேன். உன்னுடைய ஜீவியத்திற்குப் பெரும்துணையாக உனது மகன் சுவேதகேது இருக்கிறன். உன்னைப் பற்றிய பொறுப்பு எல்லாம், அவன் தாங்கக்கூடியவன். அவன் தர்மம் அறிந்தவன்; புதிய தர்மம் வகுக்கும் ஆற்றலும் படைத்தவன். முதுமையிலும் அவன் உன்னைக் காத்து நிற்பான். மனைவி ஒருத்தி பக்கத்திருந்து பணியாற்றவேண்டும் என்ற அவசியம் உனக்குக் கிடையாது.

**ந :** ஸ்வாமி நான் அவளை...

**அ :** சரி, உன்னுடன் பேசிப் பயனில்லை, உதறி எறிய வேண்டிய பெண் மோஹத்தை விடாது பற்றிக்கொண்டு நிற்கிருய். போ, இரு, சுகமாக வாழ்! நான் திரும்புகிறேன், முடிவுருத எண்ணத்துடன், (புறப்படுகிருர்)

**ந :** ஸ்வாமி பொறுங்கள்; என்னை நரகத்தில் தள்ளிவிட்டுப் போகாதீர்கள். பிரஜாவதியை உங்களுடனேயே அனுப்பிவிடுகிறேன்...

**அ :** மனப்பூர்வமாக அளிக்கப்படாத ஆதித்யத்தை நான் ஏற்பது எப்படி?

**ந :** மனப்பூர்வமாகவே அளிக்கிறேன் அமருங்கள்... பிரஜாவதி! பிரஜாவதி!

[பதில் குரல் இல்லை. நசிகேதர் குடிலுக்குள் சென்று பார்க்கிருர். பிரஜாவதியைக் காணேம். பின் புறத்துக் கதவு திறந்து கிடக்கிறது. வியப்புடன் வெளியில் வருகிருர்.]

[சுவேதகேதுவும், பிரஜாவதியும் வருகின்றனர். அவள் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்குகிருள், ஓடினதற்கு அறிகுறியாக.]

**சுவேதகேது :** அப்பா, அன்னை கூறுவது உண்மையா ?

**ந :** ஆம்.

**சு :** அப்படியானல் என் தாயை, உங்கள் மனைவியை இந்த அதிதியிடம் ஒப்படைப்பீர்களா ?

**ந :** (ஹீனஸ்வரத்தில்) ஆம்...

**சு :** 'ஆம்' என்று கூறுவதற்கு உங்களுக்கு லஜ்ஜை உண்டாக வில்லையா? இதற்குப் பதிலாக உயிரைத் துறக்கலாம் எனத் தோன்றவில்லையா?

**ந :** அறியாது பேசுகிருய், சுவேதா !

**சு :** நீங்கள் தான் அறியாது செய்கிறீர்கள்.

**அ :** சிறுவன் நீ, பதறுகிருய்...

**சு :** பதருமல் கைகட்டி வாய்புதைக்க வேண்டுமா இச்சமயத்தில்? மாற்ருன் ஒருவன், அன்னையை அபகரிக்கும்போது மௌனம் சாதிக்க வேண்டுமா ?

**அ :** ஸ்திதியை சிந்தித்துப்பார்...

**சு :** நீங்கள் தான் சொல்லுங்களேன் ! ஒருவன் மனைவியை அன்னியன் சூதாகக் கவருவது தவறு அல்லவா?

**அ :** தவருே, சூதோ இல்லை, என் செயலில். ஒரு காலத்தில் மனிதர்கள் மிருகப் பிராயத்தில் இருந்தார்கள். சமூக உணர்ச்சியற்று தனித்து வாழ்ந்தார்கள். பெண்களும் ஆடவர்களும் தங்கள் தங்கள் இஷ்டம் போல் கூடினர்கள், பிரிந்தார்கள். அக்கால தர்மம் அது. இப்போது நிலைமை மாறியுள்ளது. பெண் ஆணின் உடைமைகளில் சேர்ந்தவள்... உன்னுடைய தந்தைக்குச் சொந்தம் என உரிமை கொண்டாடுகிருர் அல்லவா? இது அனுபவ பாத்யம். உன் தந்தையிடமிருந்து பலவந்தமாக யாரும் இதைப் பறிக்க முடியாது. அவராக விரும்பினல் இந்தக் குடிசையை யாருக்கும் தானம் செய்யலாம். அதைப் போலவே, உன் தாயாரும் உன் தகப்பனர் விரும்பினல்...

**சு :** அவர் விரும்புகிருரா ?

**அ :** விரும்புகிருர்; விரும்பி, எனக்குத் தானமாகவும் அளித்துவிட்டார். இனி இந்த மாது எனக்குச் சொந்தம். என்னுடன் அவள் வரவேண்டும்... நசிகேத! எனக்கு அளிக்கப்பட்ட தானப்பொருளை நான் எடுத்துச் செல்லலாமா?

**ந :** எனக்கு... எனக்குத் தடை இல்லை!

**சு :** அப்பா, இது தான் தர்மமா?

**ந :** அறத்தின் ஆக்ஞை இது தான்,

**சு :** இது மனிதத் தன்மையா ?

**ந :** எனக்குத் தெரியாது.

**சு :** நான் சொல்கிறேன், இது மிருகத்தன்மை. காட்டு மிராண்டித் தனம் என்கிறீர்களே, அதைவிடக் கேவலம். பெண்ணை, ஸ்தாவர ஜங்கமப் பொருள்களுடன் சேர்த்துப் பேசுகிறீர்கள்; மிருக வர்க்கத்திலும், பக்ஷி இனத்திலும் கூட, கொஞ்சம் ரத்த பாசம் இருக்கிறது. அவற்றிலும் நீசத்தனமாக நடக்கிறீர்கள் !

(14-ம் பக்கம் பார்க்க.)

(13-ம் பக்கத் தொடர்ச்சி.)

## சுவேதகேது



ந : (வருத்தமாக) உன் தாயைப் பிரிவதற்கு, என் மனம் மகிழ்ச்சியுடன் இணங்குவதாக நினைக்கிறாயா? என்னுடைய உடலில் ஒருபாகம் ஆகிவிட்டாள் அவள்; அவளைப் பிரிவதென்றால், என் அங்கம் ஒன்றை வெட்டுவது போலத் தான். ஆனால் வீடுதேடி வந்த விருந்தாளியின் இச்சையைப் பூர்ணமாக்குவது கிருஹஸ்தனின் முதல் கடமை என்று சாஸ்திரம் கூறுகிறது; அதனால் தான் உன் தாயை...

சு : விருந்தாளி, நியாயாதீதமாக செயலாற்றும் குணஹீனனாக இருப்பினும் அவனுடைய எண்ணத்தை நாம் நிறைவேற்ற வேண்டுமா?

அ : சுவேதகேது, அந்தணரை அவமதிக்கிறாயா?

சு : (ஏளனமாக) அந்தணரா நீ! காமாதூர் என்று எண்ணிவிட்டேன்!...மாற்றான் மனைவி மீது காமநோக்கு செலுத்துவது அந்தணருக்கு...

அ : கால தர்மத்தை அனுசரித்து நடக்க வேண்டும்... நான் உன்னுடன் வாதாடத் தயாராயில்லை, பிரஜாவதி எனக்கு உரியவள். அவளை அழைத்துப் போகிறேன். பெண்ணே என்னோடு வா!

பிரஜாவதி : (பலிபீடத்தருகில் நிற்கும் பசுவைப் போல மௌனமாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தவள் பரிதாபமாக) சுவேதா! உன் தந்தை என்னைக் கை விட்டார்; நீயும் என்னைக் கைவிடுவாயா? குரூரமான செங்கண்களை உடைய இந்த மனிதரிடமிருந்து என்னைக் காப்பாற்ற மாட்டா?

(அவள் சுவேதகேதுவின் பின்னால், ஒதுங்கி, ஒண்டிநிற்கிறாள்; அதிதி அவளை அணுகுகிறார்.)

சு : (ஆத்திரமுற்று) அந்தணரே, அதிதி தேவரே, அன்னையைத் தீண்டாதீர்; தீண்டும் கரம் துண்டம் ஆகும், ஜாக்ரதை! (அதிதி நின்று விடுகிறார்.)

ந : சுவேதா அதிதியை அவமதியாதே!

அ : இளம் ரத்தம் துள்ளுகிறது, என் பொருளை நான் எடுத்துச் செல்ல இடையூறு செய்பவன் யார்? நானும் என்னுடையதை செய்கிறேன்!

சு : (உறுதியுடன்) பார்க்கலாம்!

ந : வேண்டாம், சுவேதா, தர்மத்தை ......

சு : போதும்; உங்கள் தர்மத்தைக் கட்டி வையுங்கள். பிராமணரே நீர் போகலாம்!

அ : பெண்ணே!

சு : நாவை அடக்கிப் பேசும்; இனி ஒரு முறை இவ்வாறு முறையின்றிப் பேசினால்...!

ந : இவள் இவருக்குச் சேர வேண்டியவள்!

அ : ஆகையால் என்னைப் பின் தொடர்ந்து வரவேண்டியவள், இவள் எனக்குத்தான் பாத்தியப்பட்டவள்...

சு : இவள் என் தாய்!

ந : இவள் என் மனைவி; நான் தானம் செய்து விட்டேன்.

சு : அப்பா, உங்களுடைய மனைவி என்ற உறவு இவ்வளவு எளிதாக அறுவது ஆச்சரியம் தான். இருபது வருஷங்களுக்கு மேல் இவளை ஆண்டு அனுபவித்தீர்கள். உங்களுடைய நலம் கோரி நீங்கள் நோயுற்று உயிருக்காக ஏங்கிய போதெல்லாம், உங்கள் பக்கத்தில் இருந்து, இரவெல்லாம் கண் விழித்துப் பணியாற்றியவள், உங்களைத் தெய்வமாகக்கொண்டாடியவள், நன்றியுணர்ச்சி சிறிதுமின்றி தானம் 'செய்யத் துணிந்து விட்டீர்கள்! ஏனென்றால், பெண் ஸ்தாவர ஜங்கமங்களைப்போல் உங்களுடைய உடமை என்கிறீர்கள். உங்களுக்கு அவ்வளவு அழுத்தமாக ரத்த பாசம் இருக்கிறது! நீங்கள் மனைவியைக் கை விடலாம் நான் என் தாயை நிராகரிக்க முடியாது!

அ : பெண்ணுக்கு உடையவன் கணவன். அவன் இஷ்டம் போல் அவளை எதுவும் செய்யலாம்!

சு : மைந்தனுக்குத் தாயிடம் உரிமை இல்லையா? உரிமை இல்லா விட்டாலும் கடமை இல்லையா? நான் என் கடமை தவறமாட்டேன். என் மாதாவை ரக்ஷிக்கும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. சிறகறுந்த பறவை போல் என் கால்களில் விழுந்து, 'என்னைக் காப்பாற்று!' என அவள் துடிக்கும்போது, காது கேளாதவன் போல் நான் அவளை நிர்க்கதியாக விட்டால் — தர்மத்துரோகம் செய்தவன் ஆவேன். நான் அவளிடம் தோன்றியவன். ஊண் கொடுத்து, எனக்கு உயிரும் உடலும் கொடுத்து, தன் ரத்தமும் ஊட்டி என்னை வளர்த்தவளை என் கால் கொண்டு ஊன்றி நிற்கும் வலிமை பெற்ற பின் ஆதரிக்கும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது; அவள் என்ஜனனி; தெய்வம். துராக்ரஹமாகத் தீண்டினால், என் தெய்வத்தைக் களங்கப்படுத்துவது போல். நான் அதை அனுமதிக்க முடியாது!

அ : சிறு பிள்ளைத் தனமாகப் பேசுகிறாய்!

ந : இல்லறத்தை நான் காக்க வேண்டும். அதிதியை பாராமுகமாக அனுப்புவது மறம். அதனால் நரகம் தான் லபிக்கும்.

சு : அந்தப் பொறுப்பும் நானே ஏற்கிறேன். அற்பனன அதிதியின் நீசத்தனமான ஆசையைத் திருப்தி செய்யாதவர்களுக்காக ஒரு நரகம் இருக்கும் எனில் அந்த நரகத்திற்கு நானே போகிறேன். இம்மாதிரி தண்டனை விதிக்கும் கடவுளின் அருகில் இருப்பதை விட, நரகத்தில் வாழ்வதே மேல்!

ந : உன் இஷ்டம்!

அ : தந்தையும் மகனும் ஒற்றுப்போய் விட்டால், என் பொருளை நான் விடுவித்துச் செல்லவேண்டாமா?

[மீண்டும் பிரஜாவதியை நெருங்குகிறான்.]

சு : பிராமணரே, எச்சரிக்கை. ஞாபகம் இருக்கட்டும்? என் அன்னையைச் சீந்தும் கரம் உடம்பிலிருந்து பிரியும்!

[அவன் அதிதியை நெருங்குகிறான்.]

அ : (பயமுற்று) அறத்தை அழிக்கத் துணிகிறாயா?

சு : எது அறம்? மனிதரில் பாதியான இனத்தை அலட்சியம் செய்து பெண்மையைத் துண்டாடுவதா அறம்? ஒரு பாபியின் இச்சா பூர்த்திக்காக, வாழ்க்கைப் பாதியான மனைவியைத் தானமாகக் கேட்கும் அறம் அரக்கத் தன்மை வாய்ந்ததாக இருக்க வேண்டும். மனிதனுக்கு ராக்ஷஸ தர்மம் எதற்கு?

அ : உன் பிதா தானம் செய்த பிறகு..

சு : அவளை தானம் செய்வதற்கு அவருக்கோ, எனக்கோ, அல்லது அவளுக்கேயோ எவ்வித அதிகாரமும் கிடையாது. இன்று இவ்வீட்டிற்கு வந்து, நீங்கள் அவளை அழைத்துப் போகிறீர்கள், நாளை உங்கள் வீட்டிற்கு வரும் ஒரு விருந்தாளி அவளை வேண்டினால்? இப்படியே கைமாறிக் கொண்டிருக்க பெண், ஜடம் அல்ல; உங்களுடைய இந்திரிய மிருகம் தன் இஷ்டம் போல் வேட்டையாடுவதற்கோ, விற்பனை செய்வதற்கோ, ஏற்பட்ட பிராணியும் அல்ல!

அ : இன்றைய தர்மம் அப்படிக் கூறவில்லையே?

சு : தர்மம் காலத்திற்கு ஏற்றபடி மாறுதல் கொள்ளவேண்டும்; அதுவும் ஸ்திரீ புருஷ சம்பந்தம் மிகவும் நுட்பமானது. இருளுணர்ச்சி என வருணிக்கப்படும் காமவுணர்ச்சிக்கு உதவும் பெண் அவயவங்களே, புனிதமான புத்திரப் பேறுக்கும் கருவிகளாகின்றன என்ற பேருண்மையை மனதில் வைத்துக்கொண்டு தான், ஸ்திரீபுருஷ ஸம்பந்தமான தர்மத்தை வகுக்க வேண்டும். இன்றைய தர்மம் அதற்கு மாறாக இருக்கிறது என்றால் நான் புது தர்மம் வகுக்கிறேன்: ஒரு பெண்ணை ஒரு புருஷன் தான் மணக்க வேண்டும்; பரபுருஷனுடன் அவளை அனுப்புவதற்குக் கணவனுக்கு உரிமைகிடையாது; செல்வதற்கு அவளுக்கும் அதிகாரம் இல்லை; அவள் தன் கணவனைச் சார்ந்தே வாழவேண்டும். மாற்றானின் மனையாள் மீது காம நோக்கு செலுத்துவதும் ஆடவனுக்கு அதர்மம்; அன்னியனை மனதில் நினைப்பதும் ஸ்திரீக்கு அதர்மம். நான் விதித்த புத்தறம் இது. எங்கும் நிறைந்து எல்லாமாக இருக்கும் அக்கினி மீது ஆணை! இனி வேறு நல்லறம் தோன்றும் வரை, இந்த தர்மமே நிலவும். இதை மீறி நடப்பவர் — அதற்குரிய தண்டனையைப் பெறுவர்! ...அம்மா! நீ உள்ளே போகலாம். நான் கூறியதே இந்த யுகத்திற்கு தர்மம்; அது காத்து நிற்கும். அந்தணரே! நீர் போகலாம். இந்த புதிய தர்மத்தைப் போகும்இடமெல்லாம் சொல்லிக்கொண்டே செல்லுங்கள்!

அ : (நெடு மூச்சுடன்) நசிகேதா! இது நியாயம் என அங்கீகரிக்கிறாயா?

ந : (திருப்தியுடன்) ஸ்வாமி, கொஞ்ச நேரத்திற்கு முன்னால் சுவேதகேது யுக தர்மம் ஏற்படுத்தவும் தகுதி வாய்ந்தவன் என நீங்களும் கூறினீர்களே?

அ : கல்வியும் வல்லமையும் உடைய வல்லான் வகுப்பதே தர்மம் ஆகிவிடுகிறது! அவ்வாறானால்...

சு : நீங்கள் போகலாம்! ஆனால் எனது புது தர்மம் நினைவிலிருக்கட்டும்; அதை மீறி, விருந்தோம்பும் இடத்தில், தாம்பத்தியத்தைச் சிதைக்க முயலாதீர்கள்!

[அதிதி தலை குனிந்தவாறு நடக்கிறார். தாய், தந்தை, தனயன்—மூவரின் முகத்திலும் மகிழ்ச்சிக் கதிர்கள் ஒளிவிடுகின்றன.]

(குறிப்பு: சுவேதகேது என்னும் பெயரைத் தவிர, வேறு பெயர்கள் ஆசிரியர் சூட்டியவை.)

(2-ம் பக்கத் தொடர்ச்சி.)

## அகமும் புறமும்

சீர்திருத்தங்கள் செய்ய முடியும். வெயில்காலங்களில் புல் வைக்கோல் முதலியவற்றை சைலேஜ் முறையில் பாதுகாப்பது, வருடம் மும்முறையும் வளரும் புல் வகைகளைப் பயிரிடுவது, தீவனத் தழைகள் தரும் பயிர் பச்சைகளைப் பயிரிடுவது ஆகியவற்றை நன்கு கவனிக்கலாம். தென்னாட்டில் மாறி மாறிப் பயிரிடும் முறையைக் கையாண்டு தீவனப் பயிர்களைப் பயிரிடலாம்.

### அங்கும் இங்கும்

இந்த யுத்தகாலத்திலும்மக்களின் ஆதரவுபெற்ற தேசிய அரசாங்கமே திறமையுடன் எல்லா விவகாரங்களையும் கவனித்து மக்களுக்கு நலம் புரிய முடியுமென நம் தலைவர்கள் கூறிவருகின்றனர். இதில் பொருளில்லாமலில்லை. சுதந்திர நாடுகளில் அரசாங்கத்தின் பொறுப்பு அதிகம். அது மக்களின் நலன்களைக் கவனிக்காவிடின் சீட்டுக் கொடுத்து வெளியேற்றப் படும். வேறு அரசாங்கம் பொறுப்பேற்கும். இந்தியாவில் தேசிய அரசாங்கம் இல்லாததால் இங்கே அமுல் நடத்தும் பிரிட்டிஷ் அரசாங்கம் தன் பொறுப்பை அவ்வளவு உஷாராக உணர்வதில்லை. மக்களிடமிருந்து தன் அதிகாரத்தைப் பெறுததால் அதற்குப் பொறுப்பேது? ஒரு உதாரணம் மட்டும் எடுத்துக்கொள்வோம்.

இந்தியாவில் வாழ்க்கைச் செலவு 250 சதம் அதிகரித்துள்ளது. ஆயினும் மக்கள் பெறும் கூலி 50 சதமே உயர்ந்திருக்கிறது. இங்கிலாந்தில் 1944-ம் ஆண்டுக் கணக்கின்படி வாழ்க்கைச் செலவு 33 சதமே அதிகரித்துள்ளது. அதே காலத்தில் கூலி விகிதங்கள் 45 சதம் யுத்தத்திற்கு முன்பிருந்ததை விட உயர்ந்துள்ளன.

இப் புள்ளி விவரங்களை நன்றாகக் கவனிக்கவேண்டும். வாழ்க்கைச் செலவு 33 சதமே அதிகரித்திருந்தும், பிரிட்டிஷ் மக்களின் கூலி 45 சதம் உயர்ந்திருக்கிறது. நம் நாட்டில் செலவு 250 சதம் அதிகரித்திருந்தும் கூலி 50 சதம் உயர்ந்திருக்கிறது. பிரிட்டிஷ் அரசாங்கம் மக்களுக்குப் பொறுப்புடைய அரசாங்கம். அது மக்களின் நலன்களில் உஷாராயிருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே நிலைமையைக் கூர்ந்து கவனித்து விலைவாசிகள் ஏறாத வண்ணம் கட்டுப்பாடுகள் சட்ட திட்டங்கள் செய்கிறது.

(5-ம் பக்கத் தொடர்ச்சி.)

## எழுதிச் செல்லும் விதியின் கை...

பிச்சுடரேன்'' அய்யருக்கு பணத்தைக் கொடுத்துவிட்டு மற்றவருடன் பேசிக் கொண்டே வெளியில் வந்தார் மணியம்.

'அய்யய்யோ, குடி முழுகிப் போச்சே, அதாரது மணியத்துடன் கூட வருவது? காலமே பணம் கொடுத்த கவுண்டரல்லவா?' செல்லனுக்கு வயிற்றில் இடி விழுந்தமாதிரி ஆயிற்று.

கூட இருந்த கவுண்டருக்கு அப்போது தான் ஞாபகம் வந்தது போலிருக்கிறது. மணியகாரரைப் பார்த்து "என்னங்க, காலையை அதுக்குள்ளறயும் வித்தாச்சுங்கிறீங்களே. அதுக்குத்தானுங்க நான் காத்தாலே நம்ப செல்லங்கிட்ட பணங் கொடுத்துட்டு, கண்டிப்பா சொல்லிஉட்டனுங்களே'' என்று புகார் செய்தார். ஆ! அவர் காளையைப்பார்க்க சாயந்திரம் வருவதாக சொன்னதை இதுவரை அவன் மறந்தே போய்விட்டான்.

சரி. வகையாய் அகப்பட்டுக் கொண்டோம் என்று செல்லனுக்கு உறுதியாய் விட்டது.

மணியகாரரும் தேளைக் கண்டவர் போல் எகிறிக் குதித்தார்.

"என்ன காத்தாலேயே பணமும் கொடுத்து சொல்லியும் உட்டீங்களா!''

ஆமாங்க, கிஸ்துப்பணம் பத்தரைப் பணத்தையும் செல்லங்கிட்டே குடுத்து விபாமா விசாரிச்சிட்டுக் கூட சொல்லி உட்டனுங்களே'' என்றார் கூட வந்தவர். மணியகாரர் கண்களில் 'டேஞ்சர் லைட்' காணப்பட்டது!

மீசையில் 'டெம்பர்' ஏறியது!

பற்கள் மாவு அறைத்தன!

தொண்டையில் பேய் புகுந்தது!

'ஏண்டா டேய் பயலே' என்றாரம்பித்தார் பாருங்க: செல்லனுக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. கையை வைத்து நடுக்கத்தை தவிர்த்துக் கொண்டான்.

"பணம் ஒண்ணுமே வசூலாகிலின்னு சொன்னியேடா படுவா நாயீ. தண்ணி போட்டாச்சா இல்லே எட்டாடிப்போட்டாயாடா?''

அவன் வீட்டில் குடிக்கக் கூழ் இல்லாமல் குழந்தைகள் தண்ணிதான் குடித்தன என்பதையும் இவன் கஞ்சி மயக்கத்தால் தள்ளாடினன் என்பதையும் அவர் அறிவாரா? இவன் தண்ணி, கள்போட்டிருப்பான். எட்டாடியிருப்பான். இது தான் அவர் கண்டது. 'சாமி' என்று நடுங்கிய சப்தம் செல்லனிடமிருந்து வந்தது,

"என்னடா சாமியாவது பூதமாவது ...ம்...பயலுக்குத் தெணவெடுக்காடா. என்னன்னு நெனச்சுக்கிட்டே. சர்க்காரு பணத்தை முழுங்கிப் போட்டா சும்மா உட்டுறுவாங்கண்ணு நெனச்சுக் கிட்டயாடா'' —சர்க்காரின் ஏகபோகப் பிரதிநிதி இவர் மட்டும் தான் —"டேய் ராமசாமி அந்தக் கண்ணிக் கவுத்தே இங்க எடுத்தாடா.''

"எசமான் மன்னிக்கணுங்க, சோறில்லாம எல்லாம் மடிஞ்சுதுங்க. ஊட்டுலே பணத்தைக் கொடுத்து ராயி வாங்கியாரச் சொன்னனுங்க. தருமதுரை உங்க கால்லே உளுகரேனுங்க'' என்று சொல்லியவாறே அவர் காலில் வீழ்ந்தான். மணியக்காரர் மிகவும் சிரமத்துடன் காலைத் தூக்கி விட்ட உதை. அவன் முண்டாசைத் தட்டிவிட்டது.

"டேய், கவருமெண்டு சொத்து உங்க பாட்டனூட்டுதுன்னு நெனச்சுகிட்டயா! நீ பாட்டுக்கு எடுத்துக்கலாம், அப்புறம் சம்பளம் வந்தா 'போட்டறலாமில்லே. நீ என்ன தாசில்தாருன்னு நெனச்சுக் கிட்டயாடா. மாசம் நூறு ரூவா வருது இதை ஊதிப் போடுவ இல்லே. ஏண்டா சர்க்கார் பணத்தை தொடறதுக்கு உனக்கு எத்தனை திமிருடா'' — என்று மணியம் கதறுகிறார். அவர் ஆயிரமாயிரமாக கைமாத்து கொடுப்பதெல்லாம் வேறு விஷயம். கயிறு கைக்கு வந்தது,

"டேய், தள்ளி நில்லுடா கழுதை, எங்கிட்டயே வாலாட்டறயாடா. தண்ணி போட்டயா இல்லேயா உம்மயச் சொல்லிப்புடு'' மணியத்தின் கை கண்ணிக் கயிற்றை லாகவமாக சுழற்றிச் செல்லனின் உடம்பின் மேல் கூசாமல் வீசுகிறது!

செல்லன் வீட்டில் அவன் மனைவியின் கை குழந்தைகளுக்கு ராய்க்களி அன்புடன் அள்ளிப் போடுகிறது.

பாங்கி அய்யரின் கை ரூபாய் ஆயிரம் சரியாயிருக்கிறதா என்று எண்ணிப் பார்க்கிறது.

அந்த சிருஷ்டிக் கிழவன் நான்முகனின் கை தலைவிதியை இன்னும் எழுதி எழுதி மேற்செல்லுகிறது!

# மகாமகம் வந்தது

"எம். விக்ரஹவிநாசன்"



மகாமகம் இன்று வந்தது !—ஆஹா !
மனம் மிகக் "குளிர்ந்தது" !

பாசியிற் புதைந்திருந்த
"புஷ்கரணி" புனிதமாம் !
நாசி மூடும் நாற்றம் இன்று
மோட்ச வாசல் திறக்குதாம் !

பன்னீராண்டு முயன்று சேர்த்த
பாபம் இன்று போக்கடிக்க
கொத்து கொத்தாய் மனிதப்பிஞ்சு
காய்த்துக் காய்த்துத் தொங்குது !

எங்கெங்கோ இருந்தவர்கள்
இங்கு வந்து குதித்தனர்
வேண்டாமென்று வழி மறித்தும்
விழுந்தடித்து வந்தனர் !

உள்ள நோய்கள் போதாவென்று
"உறவு" நோய்கள் வந்தன !
கள்ளப்பயல் "கூட்டத்திற்கு"
நல்லவிருந்து அளித்தனர்.

கண்ணால் கல்லில் மூழ்குவர் !
குளத்தில் உடலை அலசுவர் !
பண்ணும் பாபம் போக்குதற்கு
பார்த்திருந்த சந்தர்ப்பம் !

மகாமகம் இன்று வந்தது—ஆம் !
மடமை மிகவும் மலிந்தது !

**Printed at The Trichinopoly United Printers Ltd., Trichinopoly and Published by T. Sivagnanam (Editor)**